# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை




சிலம்பு-ருசு ] வள்ளுவர் ஆண்டு-உ0கரு. ஆடி Aug. '82 [பரல்-கஉ

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

## "செந்தமிழ்ச் செல்வி" உறுப்பினர்கட்கு

இவ்வாண்டு ஆடித்திங்களோடு செந்தமிழ்ச் செல்வியின் 56ஆவது சிலம்பு முடிவுற்று, அடுத்து வரும் ஆவணித் திங்களிலிருந்து 57ஆவது சிலம்பு தொடங்குகிறது. அன்பர்கள் தொடர்ந்து உறுப்பினராகி ஆதரவு நல்கு முகத்தான் அடுத்த ஆண்டுக்குரிய கையொப்பத் தொகையினை (ரூ. 16/-) உடனடியாக அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். இன்றேல் அடுத்த இதழினை விலைபெறு அஞ்சலில் (V. P. P.) அனுப்ப வேண்டியிருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

—ஆசிரியர்

---

"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ௦கரு, ஆடி ஆகஸ்ட்டு 1982 | பரல் கஉ |
| --- | --- | --- |


## தமிழ்த் தென்றல் திரு. வி. க. நூற்றாண்டு விழா

இந்த நூற்றாண்டு, இனிய நூற்றாண்டு! இதன் முற்பகுதியில் அறிஞர்கள் அணிவகுத்து வாழ்ந்தனர். இது மறைமலையடிகள், உ. வே. சா., மகாகவி பாரதி, திரு. வி. க., நாட்டார், பண்டிதமணி, பாரதிதாசன் இன்னும் பலர் வாழ்ந்த நூற்றாண்டு. திரு. வி. க.—திருவாரூர் விருத்தாசலம் கலியாணசுந்தரனார்—மேடையில் வீசிய மெல்லிய தமிழ்த் தென்றல். பண்பிலே முனிவர். இராயப்பேட்டை மாமுனிவர். எழுத்தும் பேச்சும் இவர்தம் மூச்சு. பிறப்பால் சைவர். வளர்ப்பால் சமரசஞானி. ஆணாகப் பிறந்தவர். பெண்ணினத்திற்குப் பெருமை தேடித்தந்தவர். தமிழ்ப் புலவர்களுக்கு அயலான அரசியலில் புகுந்து அதையே தம் வாழ்க்கையாக்கிக் கொண்டவர். வாழ்வில் துறவி. அரசியல் வாழ்விலும் அவர் துறவியே. அரசியல் அவரைத் துறக்க விரும்பவில்லை. அவர் அரசியலைத் துறந்துவிட்டார். தொழிலாளர்களின் 'குல தெய்வம்'. தொழிற்சங்கத்தின் வெள்ளிவிழா கண்ட தலைவர். இலக்கியம் அவருக்கு வாழ்க்கை. எழுத்து அவருக்குத் தொண்டு. பேசினார்—மேடை கிடைத்தபோது. எழுதினார்—நேரம் கிடைத்தபோது. மேடையைத் தேடி அவர் சென்றதில்லை. நேரத்திற்காக அவர் காத்திருந்ததில்லை. கவிதை, கட்டுரை, தலைமைப் பொழிவு—எதுவுமே அவருக்குக் கைவந்த கலை. அவர் தமிழ்நடை—அருந்தமிழ் நடை. மகாகவி பாரதி தம் கவிதையால் தமிழர்களைத் தட்டியெழுப்பினார். திரு. வி. க.—தம் பேச்சால்,

எழுத்தால், தமிழ் உரைநடையால் தமிழர்களை விழிப்படையச் செய்தார்.

இத்தகைய அருந்திறல் அனைத்தையும் ஒருங்கே படைத்த திரு. வி. க. அவர்களின் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடத் தமிழக அரசு முன்வந்ததற்குப் பாராட்டுகிறோம். திரு. வி. க. நடுத்தரக் குடும்பத்தில் பிறந்து, வசதியற்ற நிலையில் படித்து, படிப்பை முடிக்காமலே பள்ளியைவிட்டு நீங்கியவர். பள்ளிப் படிப்பு முடியாமற் போனதற்குக் காரணராயிருந்த தம் தமிழாசிரியர் நா. கதிரைவேற் பிள்ளையிடமே முறையாகத் தமிழ் பயின்று தமிழறிஞரானார். தமிழையும் சைவத்தையும் அடிப் படையாக ஆக்கிக்கொண்டார்.

பள்ளியில் பயின்ற கணக்கு ஓரிரு அலுவலகங்களில் கணக் காயர் வேலையைப் பெற்றுத் தரினும் தமிழாசிரியர் பணியே அவருக்கு மன நிறைவைத் தந்தது. கணக்காயர் வேலை போவ தற்குக் காரணமாயிருந்த தொழிலாளரிடையே ஒற்றுமையை வளர்த்த பண்பு பின்னர் இந்தியாவிலேயே முதல் தொழிற்சங்க மான சென்னைத் தொழிலாளர் சங்கத்தைத் தோற்றுவிக்கத் துணையிருந்தது. அரசியல் வேட்கை ஆசிரியப் பணியைத் துறக்கச் செய்தது. பத்திரிகை ஆசிரியர் தொழில் அரசியல் பணியில் ஈடுபடப் பேருதவியாக இருந்தது. அரசியல் பணியும் தொழிலாளர் தொண்டும் தொடர்ந்தன. இடையே தமிழ்ப்புலமை மேலிட சிறந்த எழுத்தாளராக, இதழாசிரியராக, கவிஞராக, உரைநடையாளராக, சொற்பொழிவாளராக அவர் உயர்ந்தார். பின்னர் அரசியலில் துறவு ஏற்பட்டது. தொழிலாளர் தொண் டிலும் ஓய்வு பெற்றார். இறுதிவரை தமிழ்த்தொண்டு, சமூகச் சீர்திருத்தப் பணி, சமய சமரசத்தை நிலைநாட்டும் திறன் ஆகியவை அவர் வாழ்வோடு ஒட்டியிருந்தன. இத்தகைய பல திறப்பட்ட அவர் வாழ்க்கையில் இல்லறவாழ்க்கையென்பது எழுப தாண்டு நெடிய வாழ்வில் ஆறாண்டு அருகிய வாழ்வாயமைந்து விட்டது.

அரசியலும் தொழிலாளர் தொண்டும் திரு. வி. க. வைத் தமிழுலகத்திற்கப்பாலும் அறிமுகப்படுத்தியது. அவ்விரண்டு துறைகளிலும் அவருக்கு நாட்டமில்லாதிருந்திருப்பின் தமிழுலக மும் சைவ உலகமும் மட்டுமே அவர் பெருமையை உணர்ந்திருக் கும். 1917இல் அரசியலில் புகுந்த திரு. வி. க. தமிழ்நாட்டுப் பேராயக் கட்சியினருள் (காங்கிரசுக் கட்சியினருள்) மிக முக்கிய மானவர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். 'தேசபக்தன்' இதழா சிரியராகித் தேசியம் வளரப் பாடுபட்டார். 1920இல் அப் பொறுப்

பிலிருந்து விலகினர். 'நவ சக்தி' இதழை அதே ஆண்டில் தொடங்கினர். அரசியல், சமயம், இலக்கியம் மூன்றுக்குமாக அதன்வழி பாடுபட்டார். நாடு விடுதலையடைய மிகுந்த தொண்டு செய்தவர். நாட்டில் பேராயக் கட்சி வீழ்ந்துபட்ட காலத்திலும் தொண்டு செய்தவர். அதன் செயற்குழுவுக்கு அடிமையாக இருக்க விரும்பாத காரணத்தால் அதன் பிற்போக்கான தன்னலப் போக்கைக் கண்டித்து வெளியேறினர்.

சமய, இலக்கியச் சொற்பொழிவாற்றச் சென்னை சூளைப் பகுதிக்குச் சென்ற திரு. வி. க. தொழிலாளர்களின் தொடர்பு பெற்றார். தொழிலாளர்க்குப் பொருளாதார உணர்ச்சியூட்ட வேண்டுமென்ற அவர்தம் நீண்டகால அவாவிற்கு அரிய வாய்ப்பு கிட்டியது. அதன் விளைவாக 1918இல் 'சென்னைத் தொழிலாளர் சங்கம்' தோற்றுவிக்கப்பெற்றது. தொழிலாளர் இயக்கத்தில் கால் நூற்றாண்டு காலம் அவர் ஆற்றிய தொண்டு தமிழ்நாட்டில் பல்வேறு தொழிற்சங்கங்கள் தோன்றவும் தொழிலாளர் வாழ்வு நலம்பெறவும் துணையாயிருந்தன.

சமயப் பணிக்கென அவர் 1903இல் இராயப்பேட்டையில் 'பாலசுப்பிரமணிய பக்தசன சபை'யைத் தோற்றுவித்தார். பிறப்பில் சைவரானாலும் எல்லாச் சமயப் பேருண்மைகளையும் போற்றினார். எல்லாச் சமயத்தாரும் இணைந்துவாழ வழிவகுக்கும் சமரச சன்மார்க்க நெறியையே அவர் கடைப்பிடித்தார். 'ஒரே குடும்பத்தில் பிறந்த ஒருவர் இந்துவாகவும் இன்னொருவர் சைனராகவும், மற்றொருவர் புத்தராகவும் வேறொருவர் கிறித்துவராகவும், அடுத்தொருவர் இசுலாமியராகவும் இருக்கும் முறையில் உலகம் சீர்திருத்தம் எய்தல் வேண்டுமென்று யான் எண்ணுகிறேன்; பேசுகிறேன்! எழுதுகிறேன்' என்று அவர்தம் சமரச நெறிநோக்கைத் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். சைவத்தின் வழி நின்றே சமரச நெறியைப் பரப்பமுடியுமென்று காட்டினர்.

சமூகச் சீர்திருத்தத்தில் ஈடுபட்ட அவர் பெண்ணின் பெருமையை எடுத்துக் கூறிப் பெண்களை மதிக்கவும் அவர்களுக்குச் சம வாய்ப்பளிக்கவும் ஆண்களை வற்புறுத்தினர். ஆறாண்டு இல்வாழ்க்கையிலேயே மனையாளைத் துறந்தவர் இறுதிவரை மறுமணம் செய்து கொள்ளாமலே வாழ்ந்தார். கலப்பு மணத்தைப் பெரிதும் ஆதரித்தார். அவர்தம் வாழ்க்கை வரலாற்றை உரை நடை நூல் வடிவிலே தந்திருக்கிறார்.

தமிழ் இலக்கியத்திற்கு அவர் செய்துள்ள தொண்டு மலையின் தோற்றமென விளங்குவதாகும். 'திரு. வி. க. நடை' என்று தனித்

துக் கூறும் அளவிற்குத் தனியானதொரு நடையைத் தோற்று வித்தவர். 'என்னுடைய வாழ்க்கையில் மூவகை நடைகள் மருவின. ஒன்று இளமையில் உற்றது. இன்னென்று சங்க இலக்கியச் சார்பு பெற்றபோது பொருந்தியது. மற்ருென்று பத்திரிகை யுலகை அடைந்த நாளில் அமைந்தது. இறுதியதே எனக்கு உரியதாய்—உடையதாய் நிலேத்தது. இந் நடை எளியது. சிறுசிறு வாக்கியங்களாலாயது.' என்று அவரே குறிப்பிட்டுள் ளார். அன்னே தருமாம்பாளேப்பற்றி எழுதுகிருர். 'தருமாம்பாள் நல்ல பெயர். பெயருக்கேற்ற இயல்பு. இயல்புக்கேற்ற பெயர்.' சிறுசிறு சொற்ருெடர்களால் சித்து விளேயாடிய உரை நடைச் சித்தர் அவர். அவர் படைத்த நூல்கள் அனேத்தும் தமிழர்கட்கு அவர் விட்டுச்சென்ற அருஞ் சொத்தாகும். அவற்றைப் பாது காக்க இந்நூற்ருண்டு விழாவின்போது உறுதி கொள்வோமாக!

———

## வன்னக் கவிக்குயிலே!

உன்னே நினேக்கையிலே—எங்கள்
உள்ளத்தி லேவீர வெள்ளம் பெருகுது!
வன்னக் கவிக்குயிலே—முகம்
வாடித் தவிக்கும் தமிழுக்கு வான்மழை
என்ன இரங்கி வந்தாய்,—இருள்
இன்னல் பிளந்தினி 'அச்சமில்லே' என்றென்
அன்னே விடுதலேக்கே—பொங்கும்
ஆவேச மின்னெனத் தாவிவந்தாய், வாழி!

கண்கள் இரண்டெனவே—வீரக்
காளேக ளோடிளங் காதல் மயிலெனப்
பெண்கள் தலே நிமிர—ஜய
பேரிகை கொட்டியிவ் வூரை எழுப்பினே!
புண்களே மாற்றிவிட்டாய்—பசும்
பொன்னும் மணியும் கனலும் பொலிதமிழ்ப்
பண்கள் பொழிந்த தெல்லாம்—தாய்ப்
பாலென நாடியிற் பாய்ந்து கலந்தன!

—கவியோகி சுத்தானந்த பாரதி.

# குறுந்தொகையில் மிகையாக உள்ள பாடல்

[மாண்புமிகு முனைவர் கா. காளிமுத்து, எம். ஏ , பிஎச். டி.

தமிழக வேளாண்மைத்துறை அமைச்சர்]

சங்கப் பாடல்கள் அனைத்தும் தனிநிலைப்பாடல்களாகும் பல்வேறு புலவர்கள் பல காலத்தில் பாடியவை அப் பாடல்கள் ஆகும். அவற்றைத் தொகுத்து நூலாக்கிப் பெயரிடும் முயற்சி சங்க காலத்திலேயே தொடங்கியுள்ளது.

ஐங்குறுநூறு, கலித்தொகை எனும் இரு நூல்களும் திணைக ளாகப் பகுக்கப்பட்டுள்ளன. எனவே திட்டமிட்டுப் பாடப் பட்டனவா அல்லது பாடப்பட்டவை தொகுக்கப்பட்டனவா என்பது சிந்தித்தற்குரியது. பாடல்களை நூல்களாகத் தொகுக் கும்பொழுது முதலில் பொருளடிப்படையில் அகம், புறம் என்று பிரித்துக்கொண்டனர். புறப்பொருளில் சேரமன்னர் பதின் மரைப் பற்றிய பாடல்கள் நூற்றினைத் தொகுத்துப் பதிற்றுப்பத்து என்று பெயரிட்டனர். எஞ்சிய பாடல்களைத் தொகுத்துப் புற நானூறு என்று பெயரிட்டனர்.

அகப் பாடல்களில் கலித்தொகையை யாப்படிப்படையிலும் திணையடிப்படையிலும் தொகுத்தனர். ஐங்குறுநூறுபற்றி முன்பு கண்டோம்.

பரிபாடல் யாப்பு அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளது.

எஞ்சிய நூல்கள் அடியளவு அடிப்படையிலும் பாடல் எண்ணிக்கை அடிப்படையிலும் தொகுக்கப்பட்டன.

இவ்வாறு தொகை நூல்களின் அடிப்படைகளைக் காணும் போது,

(1) பொருளடிப்படை

(2) யாப்படிப்படை

(3) பாடலடி, எண்ணிக்கை அடிப்படை

(4) திணையடிப்படை

என நான்கினைக் காணலாம்.

| அகம் | | | புறம் | |
| --- | --- | --- | --- | --- |
| யாப்பு | அடிபாடல் எண் | திணை | எண்ணிக்கை | பாடல் தலைவர் |
| 1. கலித்தொகை<br>2. பரிபாடல் | 1. குறுந்தொகை<br>2. நற்றிணை<br>3. அகநானூறு | ஐங்குறுநூறு | புறநானூறு | பதிற்றுப்பத்து |

இவ்வாறு பகுத்து நோக்கும்போது குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு மூன்றும் சமகாலத்தில் ஒரே அடிப்படையில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. ஏனெனில்,

(1) குறுந்தொகை—4 முதல் 8 அடி
(2) நற்றிணை —9 முதல் 12 அடி
(3) அகநானூறு —13 முதல் 31 அடி

என்ற அடியளவே தொகுப்பின் பிரிப்பிற்கு அடிப்படையாயமைந்துளது. மேலும் மூன்றும் நானூறு நானூறு பாடல்களைத் தம்மகத்தே கொண்டிருக்குமாறு தொகுக்கப்பட்டுள்ளன. 'நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு'[1] என்றும் இவை வழங்கப்படும்.

நானூறு எனும் எண்ணிக்கை சில நூல்களில் கடவுள் வாழ்த்துப் பாடலை உள்ளடக்கியதாக இருக்கும். சில நூல்களில் கடவுள் வாழ்த்துப் பாடலைத் தவிர நானூறு பாடல்கள் இருக்கும்.

அகநானூற்றில் கடவுள் வாழ்த்து நீங்கலாக 400 பாடல்கள் உள. நற்றிணையில் கடவுள் வாழ்த்துத் தவிர 400 பாடல்கள் உள்ளன. குறுந்தொகையில் கடவுள் வாழ்த்து நீங்கலாக 401 பாடல்கள் உள்ளன.

இவ்வாறு குறுந்தொகையில் 400 பாடல்கள் இருக்க வேண்டிய சூழலில் 401 பாடல்கள் இருக்கக் காரணம் என்ன என்பது ஆய்வுக்குரியது. மேலும் குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு என்ற பெயரும் வழக்கிழந்து குறுந்தொகை, நற்றிணை என்று குறுகியமையும் சிந்தித்தற்குரியது.

குறுந்தொகையின் அடியளவைப்பற்றிக் கூறும்போது 4 முதல் 8 அடி வரை என்று கூறுவர்.

---

1. இறையனார் களவியல் உரை

அங்ஙனமாயின் குறுந்தொகை 391ஆம் பாடல் இங்கு கவனித்தற்குரியது.

"உவரி ஒருத்தல் உழாது மடியப்
புகரி புழுங்கிய புயல்நீங்கு புறவில்
கடிதிடி உருமில் பாம்புபை அவிய
இடியொடு மயங்கி இனிதுவீழ்ந் தன்றே
வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்
கையற வந்த பையுள் மாலைப்
பூஞ்சினை இருந்த போழ்கண் மஞ்ஞை
தாநீர் நனந்தலை புலம்பக்
கூஉம் தோழி பெரும்பேதையவே." (குறுந். 391)

பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்ருளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது என்று அதற்குத் துறைக் குறிப்புக் கூறுவர். மழைபொழியும் கார்காலத்தில் மாலைப் பொழுதில் மலர்க்கொடியில் மயிலிருந்து தன் துணையைக் கூவியழைக்கும் குரல் கேட்ட தலைவி துயர் மிகத் தன் தோழியிடம் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

பாடுபொருள் அகப்பொருள் என்பதில் ஐயமில்லை. அந்த அளவிற்குப் பாடுபொருளைப்பற்றி ஆய்வு போதுமானது. ஆனல் பாடலடிகள் 9ஆக உள்ளன.

பாடலடிகள் 9ஆக உள்ள அகப்பாடல் குறுந்தொகையில் இடம் பெறுவது தொகுப்பு முறைக்கு முரணுக உள்ளது. மேலும் 401 என்று நானூறுக்கு மேல் மிகையாக உள்ளதை இங்கு நோக்குதல் வேண்டும். 9 அடி என்ற நிலையையும் 401 என்ற நிலையையும் நோக்க 9 அடியாக உள்ள குறுந்தொகைப் பாடல் நானூறுக்கு மேல் உள்ள மிகையான பாடல் என்று கருத எளிதே இடமளிக்கிறது. அப்படியாயின் அப்பாடல் குறுந்தொகைக்கு உரியதன்று என முடிவு கட்ட வேண்டும். அவ்வாருயின் குறுந்தொகையிலிருந்து அதனை நீக்கவேண்டியிருக்கும்.

இப்போது நற்றிணையைப்பற்றிச் சற்று சிந்திப்பது முதன்மையாகிறது. நற்றிணை நானூறு என்ற பெயரில் தொகுக்கப் பட்டுள்ள நூலில் ஒரு பாடலைக் காணவில்லை. (நற். 234).

காணுமற் போனதாகக் கருதப்படும் அந்த நற்றிணைப்பாடல் எதுவாக இருக்கக் கூடுமெனும் சிந்தனை உரையாசிரியர்களிடையே எழுந்துள்ளது.

களவியற்காரிகை பதிப்பித்த வையாபுரிப் பிள்ளையவர்கள் களவியற்காரிகையில் உள்ள பாடல் ஒன்றினைக் கூறி அது நற்றிணையில் காணாமல் போன பாடலாயிருக்குமோ என்ற வினாவை எழுப்பியுள்ளார்.[2]

"சான்றோர் வருந்திய வருத்தமும் நுமது
பொன்தோய் வன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றும் குன்றம் கொண்டிவள்
வருமுலை ஆகம் வழங்கினோ நன்றே
அஃதான்று அடைபொருள் கருதுவிர் ஆயின் குடையொடு
கழுமலம் தந்த நல்தேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே"

என்பதே அப் பாடலாகும்.

தோழி பிரிவின்போது கூறுவதாக இப் பாடலமைந்துளது.

இப் பாடலை நற்றிணைக்கு உரியதாகக் கருதுவதில் ஒரு தடை உள்ளது. பாடலின் அடிகள் எட்டே உள்ளன. நற்றிணைப் பாடல்கள் 9 முதல் 12 வரையறையுடையனவாகும். எனவே இப் பாடலை நற்றிணைக்குரியது என ஏற்க இயலாது.

தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியர் ஒரு பாடலை மேற்கோள் காட்டுகிறார். அதனை நற்றிணைப் பாடலெனக் கருதலாமென்று கூறுவர்.[3] ஆயின் அப்பாடலில் தலைவியைப்பற்றிக் கூறும்போது,

"துஞ்சுபுலி வரிப்புறம் தைவரும் மஞ்சுசூழ்
மணிவரை மன்னவன் மகளே"

என வருகிறது. இவ்வாறு தலைவியை மன்னவன் மகளாகச் சுட்டிச் சொல்லும் மரபினைச் சங்கப் பாடல்களில் காணமுடியாது. எனவே அப் பாடலையும் நற்றிணை எனக் கருதல் இயலாதெனலாம்.

எனவே குறுந்தொகையில் மிகையாக உள்ள ஒன்பதடிப் பாடலே நற்றிணையில் காணாமல் போன பாடலெனலாம்.[4] தொகுக்கும் போதோ ஏடெடுத் தெழுதும்போதோ மாற்றம் ஏற்பட்டிருக்கக் கூடும்.

— — —

2. களவியற்காரிகை ப. 120.
3. நற்றிணை. ப்ரே பதிப்பு ப. 141.
4. முல்லைப் பாடல்கள்—டாக்டர் நா. சேபராமன் ப. 29.

# குட்டம்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

'தொழுநோய்' என்றும் 'பெருநோய்' என்றும் வழங்கப் பெறுவது குட்ட நோயாகும். 'அங்கமெலாம் குறைந்து அழுகு தொழுநோய்' என்றார் அப்பரடிகள் (6. 95 : 10). 'குட்டநோய் நரகந் தம்முள் குளிப்பவர் இவர்' என்றார் திருத்தக்கதேவர் (சீவக. 253).

"உடம்பின் குறுக்கு நெடுக்காய் ஓடும் சிரைகளில் புகுந்து நாடி நரம்பு சவ்வு முதலியவைகளைத் தாக்குவதும் அல்லாமல் எலும்பு இரத்தம் ஊன் இவைகளைச் சிதைவுறச் செய்து பிறகு வெளிப்புறத்துத் தோலில் விரைந்து பரவி உடம்பில் பலவகை யான தழும்புகளை எழுப்பித் தீராவலியை உண்டாக்கும். இதனுல் காது உதடு மூக்கு விரல்கள் முதலியன தடித்து, உடல் மினு மினுத்துத் தோல் கடினமாகிச் சிவந்தும், வெளிர் மஞ்சளாகியும் கொப்புளங்கள் ஏற்பட்டுத் தினவு எரிச்சலுடன் புண்ணுகி ஆருமல் குழிவிழுந்து கடைசியாக முகம் வேறுபட்டு விரல்களும் குறையும்" எனக் குட்டநோய்பற்றிச் சாம்பசிவம்பிள்ளை அகராதி கூறும்.

"நீர்க்குட்டம், வெண்குட்டம், சொறிகுட்டம், கருங்குட்டம்,
பெருங்குட்டம், செங்குட்டம், பொரிகுட்டம், விரிகுட்டம்,
எரிகுட்டம், விரற்குறைக்குட்டம், சடைக்குட்டம்,
யானைக்குட்டம், திமிர்குட்டம், விரணக்குட்டம், காய்க்குட்டம்,
அழிக்குட்டம், கிருமிக்குட்டம், ஆருக்குட்டம்"

எனத் தமிழ் மருத்துவ நூலோர் குறிப்பிடும் பதினெண்வகைக் குட்டங்களையும் அவ்வகராதியால் அறிந்து கொள்ளலாம்.

குட்டம் என்பதை அகராதிகளும் சரி, பொதுமக்களும் சரி, எழுத்தாளர்களும் சரி 'குஷ்டம்' என்று வழங்கி வருதல் வெளிப் படை. மிக அரிதாகச் சிலரே 'குட்டம்' எனக் கூறுவதும் எழுது வதும் வழக்கமாக உள்ளது. குட்டம் என்பது குஷ்டமாக வழங்கப் பெறுகிறதா? குஷ்டம் என்பது தமிழ் மரபுப்படி குட்ட மாகக் கொள்ளப் பெறுகிறதா? மூலச் சொல்லாய்வுதான் இதற்கு முடிவு காட்டவல்லது!

ஒரு சொல்லின் வேரும், அதன் மூலமும் தமிழில் காணப் பெறுமாயினும், ஏனைத் திரவிட மொழிகளில் காணப்பெறுமா

யினும் அது தமிழ்ச்சொல்லே என்று தெளிதல் வேண்டும். இவற்றுடன், பழகு தமிழிலேயே அழுத்தமான சான்றுகள் முறையாகக் கிடைப்பின் அதனைத் தமிழ்ச்சொல்லென ஏற்றுப் போற்ற அறிவுடையார் சிறிதும் தயங்கார். மயங்கித் தாம் முன்னர் வழங்கியிருப்பினும், உண்மை உணரும் பொழுதில் அறிவுடையார் உவந்து வரவேற்றுப் போற்றுவர் என்பதிலும் ஐயமில்லையாம். இக் குறிப்புடன், குட்டம் என்னும் சொல்லை நோக்குவோம்.

'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன்இங் கில்லை' என்று புலவர் ஒருவர்பாடினர். 'குட்டுப் பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப் படவேண்டும்' என்பதும், 'குட்டக் குட்டக் குனிபவனும் மடையன்; குனியக் குனியக் குட்டுபவனும் மடையன்' என்பதும், 'குட்டின குட்டும் குண்டிற் பாய்ந்த தண்ணீரும் வருமா?' என்பதும் பிறவும் பழமொழிகள்.

குட்டுங் கையைக் கருதுவோம்; வளமாக வளர்ந்து வாளமாய் அமைந்த விரல்களும் எப்படிக் கூனிக் குறுகிப் போகின்றன! குட்டுங் கைவடிவு குட்டத்தின் இயல்பைக் குறித்துக் காட்டவில்லையா? கையைக் குறுக்கித் தாக்குவது, குட்டு; கையைக் காலைக் குறுக்கி வைக்கும் நோய் குட்டம். குட்டுங்கையும் குட்டக் கையும் சொன்மூலத்தால் ஒன்றுபடும் இடம் இது. 'கட்டுக் குட்டான ஆள்' என்பதில் 'குட்டு' என்பது குறுமைப் பொருள் நேரே வழங்குதல் தெளிவு.

குட்டுங்கையும், குட்டக்கையும் 'குட்டை'யாகிப் போகின்றன அதனால் சிறுமைப் பொருள் குட்டைக்கு ஏற்பட்டது. 'கட்டை குட்டை' என்பது மரபு மொழி. குட்டைப் பலா, 'குறும்பலா' எனப்பெறும். குறும்பலாவின் பெருமை குற்றாலத் தேவாரத்தில் விளங்குகிறது. 'குட்டையும் குழியுமோ' 'குளங் குட்டையுமோ' நாம் கேளாதன அல்ல. 'கைக்குட்டை' என்னும் புதுச்சொல்லும் நாகரிக உலகம் படைத்துக்கொண்டதே. குட்டையனும் குட்டைச்சியும் ஊரூர்க்கு இல்லாமலா போய் விட்டனர்! பட்டப் பெயர்களால் பரிமளிப்பவர்கள் அவர்கள் அல்லரோ! வளைய விளையாட்டில் (circus), குட்டையர் வரவை எதிர்பாரார் எவர்?

குட்டை மட்டுமோ சிறுமைப் பொருளில் நின்றது? குட்டி என்பதும் சிறுமைப் பொருள் தருகின்றது அன்றோ! ஆட்டுக் குட்டி, கன்றுக்குட்டி, மான்குட்டி, முயல்குட்டி, எலிக்குட்டி முதலிய குட்டிப் பெயர்கள்—ஏன்? யானைக் குட்டியும்கூட, தாயை

நோக்கச் சிறியவைதாமே! அக் குட்டிப் பெயர், எத்தனை எத்தனை குட்டிகளைப் போட்டுள்ளது? குட்டிச்சாக்கு, குட்டிப்பை, குட்டிக் கிழங்கு, குட்டிச்சுவர், குட்டிச் சாத்தான், குட்டிப்பல், குட்டிநரை, குட்டிப் பானை, குட்டிவிரல், குட்டியப்பன், குட்டிக்கலகம், குட்டித் திருவாசகம், குட்டித் தொல்காப்பியம் இப்படி எண்ணிக்கொள்ளலாமே!

விலங்கின் குட்டிதானே குட்டி? மக்களிலும் குட்டிப் பெயர் உண்டே. 'குழந்தை குட்டி எத்தனை?' என்பதிலும் 'குட்டி குறுமான்' என்பதிலும் குட்டி மகளைக் குறிக்கவில்லையா! கால் தடம் ஒன்றைக் கொண்டே மகளிர், ஆடவரில் 'குட்டியர்' என்ப தைக் கண்டுவிடலாமே! மகன் மாறுதல், பெருமகன் (பெருமான்) என்பதாலே அறிய வருமே!

குட்டி பெண்பால் பெயராயின், ஆண்பால் பெயர் ஒன்று இருத்தலும் பொருந்துவதுதானே. அது 'குட்டன்' என்பதாம். குட்ட நாடாம் மலையாள நாட்டிலே குட்டன் பெயருடையார் மிகப் பலர். இங்கே, பெரியாழ்வார் குட்டனொடு மிகமிகக் கொஞ்சு கிறார். 'என் குட்டன் வந்தென்னைப் புறம் புல்குவான்' என் கிறார். (1. 9 : 1) 'கருங் குழற்குட்டனே சப்பாணி' என்கிறார். (1. 6 : 1) 'கோவலக் குட்டற்கு' என்கிறார். (1. 2 : 13) 'என் சிறுக்குட்டன் எனக்கோர் இன்னமுது எம்பிரான்' என்கிறார் (1. 4 : 2).

குட்டம் என்பது மிகப் பழஞ்சொல். சங்கச் சான்றோர் வாக்கிலும் பயின்ற சொல். 'நெடுநீர்க் குட்டம்' (புறம். 243) 'இருமுந்நீர்க் குட்டம்' (புறம். 20) 'நளிகடல் இருங்குட்டம்' (புறம். 26) என்று பயில வழங்கப்பெறுகிறது. இக் குட்டச் சொல்லிற்கு 'ஆழம்' என்பது பொருளாம். குறுகிய இடத்தில் அமைந்த நீர்நிலையைக் குறித்த குட்டம் என்னும் சொல் அதன் பின் அதன் ஆழத்திற்கு ஆகிப், பின்னே அதனினும் விரிந்து அவ் வாழப் பெருக்குடைய கடலளவுக்கு விரிந்ததாதல் வேண்டும். இதனை நோக்க இச் சொல்லின் தொல் பழமை மிகத் துலங்கும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் யாப்பியல் கூறுங்கால் 'குட்டச்' சொல்லைக் குறித்தார் (1372 - 74). 'குட்டமும் நேரடிக்கு ஒட்டின என்ப' என்று கூறிக், குட்டம் அளவடியில் குறுகிய அடி என்பதைக் குறித்தார்.

'உன் குட்டை உடைக்கிறேன் பார்' என்பதில் குட்டு என்பது கரவான செய்தியைக் குறிக்கிறது. குறுகி ஆழ்ந்த நீர் நிலை இருள்படிந்து புலப்படாவாறு கிடப்பதன் வழியே, கரவுப் பொருள் குறித்ததாதல் வேண்டும்.

குள் என்னும் வேரில் இருந்து பிறந்த சொற்களுள் ஒன்று குட்டம். அது குறுமைப் பொருளது. அப் பொருள் மாறு வகையிலேயே ஆசிரியர் தொல்காப்பியர் காலமுதல் வழங்கி வருகின்றது. அவருக்கு முன்னரும் வழங்கியது என்பதை அவர் மறவாமல் (1372 என்ப; 1374 என்மனார்) புலவர் எனக் குறிப்பிடுகிறார். இத்தகு தொல் வழக்கும், பொருள் பொருந்திய நெறிமுறை வழக்கும், சான்றுகளும் பல்கியிருத்தலின் 'குட்டம்' என்னும் தமிழ்ச் சொல்லே 'குஷ்டம்' என ஆய்வின்றி எழுதப்பெறுகிறது எனக் கொள்க.

வடமொழி பயிலச் சென்ற ஒருவன் வடமொழி 'ஷ்' தமிழில் 'ட்' ஆகும் எனத் தெரிந்த அளவில், வடமொழி பயின்றதாகத் திரும்பினானும். ஆட்டுக் குட்டி ஒன்று வேட்டியைத் தின்னக் கண்டானும். தன் மொழிப் புலமையைக் காட்டுவானாய், 'ஆஷ்டுக் குஷ்டி வேஷ்டியை திஷ்ட்றது ஓஷ்டு ஓஷ்டு'' என்றானும். இவ்வாறு என்ன செய்கிறோம் என்பது தெரியாமல் செய்த தவற்றின் விளைவே 'குஷ்டம்' என்று நகைக்கவே தோன்றுகிறது! அதே பொழுதில் நம்மவர் செய்கை நலிவுறுத்தக் கூடியது என்பதைக் கூறாமல் விடுவதும் முறையில்லை என்றே தோன்றுகிறது.

———

## மாணவர் மன்றப் பொன்விழா

*சென்னை மாணவர் மன்றத்தின் பொன் விழா 25—7—82 அன்று இராசாசி மண்டபத்தில், சென்னை உயர்நீதிமன்ற நடுவர் மாண்புமிகு. பு. ரா. கோகுலகிருட்டிணன் அவர்கள் தலைமையில் சிருஞ்சிறப்புமாக நடைபெற்றது. கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் பொன்விழாப் பேருரை ஆற்றினர். முன்னாள் துணைவேந்தர் தாமரைத்திரு. நெ. து சுந்தரவடிவேலு அவர்கள் பொன்விழா மலரை வெளியிட, சட்டப்பேரவை உறுப்பினர் திரு. அ செல்வராசன் அவர்கள் மலரினைப் பெற்றுக்கொண்டார். பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியம் அவர்கள் பரிசுக்குரிய மாணவர்களுக்கும் பள்ளிகளுக்கும் பரிசுகளை வழங்கிப் பாராட்டினர். தமிழுக்குத் தொண்டுசெய்த தேவநேயப் பாவாணர், திரு. வி. க., பாரதியார், பாரதிதாசனர், டாக்டர் இராசமாணிக்கனர், டாக்டர் அ. சிதம்பரநாதனர் ஆகியோரின் திருவுருவப் படங்கள் திறந்துவைக்கப்பெற்றன. ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனர், கி. வா. சகந்நாதன், அ. மு. பரமசிவானந்தம், அன்பு கணபதி ஆகிய புலவர் பெருமக்கள் வாழ்த்துரை வழங்கினர்.*

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் ௪௮௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**'இல்'—துளைத்தற்கருத்து வேர்ச்சொல்**

இல்—இள்—இடி = குத்தல், தாக்கல், தகர்தல், தகர்ப்பது போன்ற ஓசையெழுப்பல்.

ம, க., தெ. இடி.

இடிதல்—தகர்தல் (கம்பரா. மகுடபங். 15), கரையழிதல்.

இடிதல்—முனைமுரிதல். அரிசி இடிந்துபோயிற்று (உ. வ.).

இடிதல்—முறிதல் (பிங்.), திகைத்தல். துயரச்செய்தி கேட்டு இடிந்துபோனான் (உ. வ.)., இடிதல்—வருந்துதல். "என்னையுங் கொண்டிதனை யெண்ணி யிடிவனே" (அருட்பா, ௫—ஆற்ரு. 5).

இடிதல்—நோதல். தலையிடிக்கிறது (உ. வ.).

இடித்தல்—முழங்குதல். "அரிமா னிடித்தன்ன" (கலித். 15).

இடித்தல்—இடியொலிபடுதல். "இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்" (நாலடி. 100.)

இடித்தல்—முட்டிக்கொள்ளுதல். கதவு நிலை தலையிலிடிக்கும் (உ.வ.). இடித்தல்—மோதுதல். கப்பல் கரையிலிடித்தது (உ.வ.). இடித்தல்—சீற்றங்கொள்ளுதல். 'கூற்றினிடிக்கும் கொலை வேலான்'' (சீவக. 432).

இடித்தல்—தூளாக்குதல். "பொற் சுண்ணமிடித்து நாமே" (திருவாச. 9, 1).

இடித்தல்—தகர்த்தல், வீட்டையிடித்துத் தள்ளினான் (உ. வ.)

ம. இடிக்குக, க. இடி. து. எட்புனி. தெ. இடியு, டகொனு. கோலா. இர்.

இடித்தல்—நசுக்குதல். "கரும்பினை...யிடித்து நீர் கொள்ளி னும்" (நாலடி. 156). இடித்தல்—தாக்குதல். குந்தத்தால் இடித்தார் (உ. வ.).

இடித்தல்—முட்டுதல். அந்த மாடு இடிக்கும் (இ. வ.).

இடித்தல்—கழறிச் சொல்லுதல். "இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்" (குறள், 448).

இடித்தல்—கொல்லுதல். "இடிக்குங்கொல் இவனையென் பார்" (சீவக. 1108).

இடித்தல்—தோண்டுதல். "கணிச்சிகளிற் கயம்பட நன் கிடித்து" (சீவக. 592.)

இடித்தல்—கெடுத்தல். "விருப்பிடித்து" (இரகு. தேனுவ. 71.)

இடி—தாக்குதல், மோதுதல். இடிகொடுத்தல்—குழந் தைகள் விளையாட்டுக்காகத் தலையோடு தலை மோதிக்கொள்வது. இடிகொடுத்தல்—டீ கொடுத்தல் என இக்காலத்து மருவி வழங்கு கிறது.

க. இடி, டிக்கா, டீக்கு.

இடி—தாக்கம், உரலுக்கு ஒரு பக்கம் இடி மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி (பழ.).

இடி—மாவு, சுண்ணம் (பிங்.). இடி—சிற்றுண்டி வகை (பிங்.).

இடியப்பம்—இடியாப்பம்—மாவாற் செய்த சிற்றுண்டி. இடி—கழறுஞ்சொல்.

"இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர்" (குறள், 607).

இடி—குத்துநோவு. மண்டையிடி (உ. வ.).

இடிசல்—நொறுங்கின தவசம்.

இடிஞ்சில்—விளக்குத்தகழி. "உடலெனு மிடிஞ்சில் தன்னில் நெய்யெனுந் திரியுமாகி" (தேவா. 503, 2).

ம. இடிஞ்சில்.

இடித்தடு—பிட்டு, இட்டலி. "நரைத்தலை முதியோனி டித்தடு கூலி கொண்டு" (கல்லா. 46). இடிக்கொழுக்கட்டை—மாக்கொழுக்கட்டை.

தெ. இடிகொடுக.

இடியல்—பிட்டு. "இடியலினுணவு" (குமர. பிர. காசிக். 4).

இடிப்பு—இடி. "இடிப்பென வார்த்து" (கந்தபு. சிங்கமு. 437).

இடிப்பு—ஒலி. "சேவலங்கொடி யிடிப்பினுல்" (கந்தபு. திருப்பரங் 20).

இடிபடுதல்—தாக்கப்படுதல், நொறுங்குதல். இடிபட்ட அரிசி (உ. வ.). இடிபொடியாக்குதல்—தூளாக்குதல். தெ. இடிலிபோவு.

இடிபடுதல்—வெடிபடுதல். "இடிபட முழங்கிச் செந்தீ" (சீவக. 1084).

இடிபடுதல்—துன்பப்படுதல். வறுமையால் இடிபடுகிறுன் (உ. வ.).

இடிவு—கேடு, அழிவு. "இடிவில் பெருஞ்செல்வம்" (தேவா. 707, 6). ம. இடிவு.

இடிப்புண்—குத்தலெடுக்கும் புண்.

இடிப்புற்று—குத்தலெடுக்கும் புற்றுநோய்.

இடிமரம்—உலக்கை.

ம. இடிமரம். க. இடிமர.

இடியுரல்—கல்லுரல். இடிதடி—உலக்கை.

ம. இடிகல்லு—வெற்றிலைப்பாக்கு உரல். குற்றுணிக்கல். இடி—குத்துதல்.

ம., க. இடி. கோத. இட். து. இட். குட. இடிபு. தெ. இடியு. கொலா. இட்.

இடி—இடியேறு.

ம. இடி. க. இடி, சிடில். கோத. இடிய். துட. இடிய். தெ. பிடுகு.

இடித்தீ—மின்னல். இடிவாள்—மின்னல்.

இடிநாதம்—இடிமுழக்கம். இடிபொடி—குழப்பம், ஆரவார ஓசை, தூள் தூளாதல்.

இடிவெட்டு—இடியேறு பாய்தல், இடியோசை.

இடிதல்—கீழிறங்குதல். இடிவேர்—முளைக்கும் வித்தில் தோன்றும் அடிவேர். இடியறை—ஓர் இசைக்கருவி. இடிவலை—மீனவர் பயன்படுத்தும் மீன் வலைகளுள் ஒரு வகை.

———

(தொடரும்)

## உவமைக் கவிஞர் 'சுரதா'வின் மணிவிழா

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனரிடம் கொண்ட பற்றின் காரணமாக 'இராச கோபால்' என்னும் தம்முடைய இயற் பெயரைச் 'சுப்புரத்தின தாசன்' என மாற்றிப், பின்னர் அதனைச் 'சுரதா' என்று புனைபெயராக்கிக் கொண்டு, ஏறக்குறைய முப்ப தாண்டுகளாக உவமை நயமும்—முற்போக்குக் கருத்துகளுங் கொண்ட கவிதைகளை எழுதிவரும் கவிஞர் 'சுரதா' அவர்களின் மணிவிழா 24—7—82 அன்று மாலை சென்னை இராசாசி மண்டபத்தில் சென்னை நகர நாட்டாண்மையர் (ஷெரிப்) உயர்திரு சிவந்தி ஆதித்தன் அவர்கள் தலைமையில் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது.



மாண்புமிகு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் கவிஞருக்குச் சொற்சுவைக் கவிஞர் என்னும் பட்டத்தினை அளித்துப் பொற்கிழி வழங்கிச் சிறப்புச் செய்தார். தமிழகச் சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் மணிவிழா மலரை வெளியிட்டார். வருவாய்த் துறை அமைச்சர் மாண்புமிகு எஸ். டி. சோமசுந்தரம் அவர்கள் கவிஞருக்குப் பொன்னடை போர்த்திச் சிறப்பித்தார்.

புலவர் ஏ. கே. வேலன், சிலம்பொலி செல்லப்பனர் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். கவிஞர்கள் பலர் சுரதா அவர்களைப் பாராட்டிப் பாமாலை சூட்டினர். கவிஞரின் ஏற்புரையுடன் விழா இனிது நிறைவுற்றது.

கவிஞர் சுரதா அவர்கள் பல திரைப்படங்களுக்குப் பாடல்களும் உரையாடல்களும் எழுதிப் புகழ்பெற்றவர். இவரது கவியாற்றலைப் பாராட்டும் முகத்தான் தமிழக அரசு இவருக்குக் கலைமாமணி என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

மணிவிழாக் கண்ட கவிஞர் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து சுவையும் பயனு மிக்க கவிதைகளை வழங்கித் தமிழ் மொழிக்கும் நாட்டுக்கும் தொண்டாற்ற வேண்டுமென உளமார வாழ்த்துகிறோம்.

———

# பாரதி போற்றிய திருக்குறட்பாக்கள்

[பன்மொழிப் புலவர், மு. சதாசிவம், க மு. இலக் ]

(முன் இதழ் ௬௮௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி உரைநடைப் பகுதிகளில் பாரதியார் குறட்பாக்களை எடுத்தாண்ட இடங்களை நோக்குவோம்.

''செல்வம்'' (2) என்ற கட்டுரையில் 'கல்வி' அதிகாரத்துள் வரும் 393 ஆவது குறளை எடுத்தாளுகிறுர்.

''கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.''

என்று வள்ளுவர் சொல்லியபடி, படித்தவன் படியாதவனை வெறும் குருடனுகக் கருதி நடத்துகிறுன். பணமுடையவனே பணமில்லாதவனைப் பிணமாக நினைக்கிறுன்.

மாந்தர் இவ்வுலகில் பெறத்தக்க இன்பங்களுள் ''பெருஞ் சுவைத் தனி யின்பம்'' காதலின்பமே என்பது பாரதியாரின் கருத்து. இன்பத்தைப்பற்றி ஔவையார் கூறும் கருத்துக்களைக் கூற வந்தவிடத்துத் ''தமிழ் நாட்டு நாகரிகம்'' என்ற கட்டுரையில் காமத்துப்பால் குறட்பா ஒன்றை (1101) எடுத்துக் காட்டுகின்ருர்.

''கண்டுகேட் டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள''

என்று திருவள்ளுவர் பாடியிருக்கிறுர்.

''காண்டல், கேட்டல், உண்டல், மோப்பு, தீண்டுதல் எனும் ஐவகை இந்திரியங்களையும் ஒருங்கே இன்புறுத்தும் இயல்பு ஒளி பொருந்திய வளையலணிந்த இப் பெண்ணிடத்தேதானுள்ளன'' என்பது அக்குறளின் பொருள். இதனுடன் உயிருக்கும் மனத்துக்கும் சேர இன்பமளிப்பதனுல் காதலின்பம் இவ்வுலக இன்பங்களனைத்திலும் தலைமைப்பட்டதாயிற்று. மனிதப் பிறவி எடுத்ததனுல் ஒருவன் எய்தக் கூடிய பெரும் பயன்களைக் கணக்கிடப் புகுந்த இடத்து நம் முன்னோர் காதலிப்பதையே இன்பமென்னும் பொதுப் பெயரால் சொல்லி இருக்கிறுர்கள்.''

'சந்திரிகையின் கதை' ஐந்தாம் அத்தியாயத்தில் காமத்துப் பாலில் வரும் ஒரு குறளை எடுத்துக்கூறியுள்ளார் : ''சிறிது

நேரத்துக்குள் மகளையும் அழைத்துக்கொண்டு சுப்புசாமிக் கோனர் புறத்துத் திண்ணைக்கு வந்து சேர்ந்தார். அவளுடைய விழிகளைக் கோபாலையங்கார் நோக்கினர். அவள் எதிர்நோக் களித்தாள்.

'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்,
என்ன பயனு மில'

என்ருர் திருவள்ளுவ நாயனர். அவளைப் பார்த்த மாத்திரத்திலே தம்மை மணம் புரியச் சம்மதப்பட்டு விட்டாளென்று கோபாலையங் காருக்குத் தெளிவாகப் புலப்பட்டுவிட்டது''.

அதே கதையில் இன்னொரு காமத்துப்பால் குறளும் இடம் பெற்றுள்ளது:

''ஊடலன்றே காதலின் மிக இனிய பகுதியாவது?

'உணவினும் உண்ட தறலினிது; காமம்
புணர்தலின் ஊட லினிது'

என்றன்றே சாட்சாத் பிரமதேவனுடைய அம்ச பூதரும் மகாகவியு மாகிய திருவள்ளுவதேவர் அருளியிருக்கின்ருர்!''

இப் பகுதியிலிருந்து திருவள்ளுவர்மீது பாரதியார் கொண் டிருந்த பெருமதிப்புப் புலனுகின்றது.

நம் நாட்டறிஞர்கள் தெய்விக உண்மைகளை உலகத்தாருக்கு வாரி வழங்குவது போல உலகியலறிவையும் வழங்க வேண்டும் என்று 'தராசு' என்ற கட்டுரையில் பாரதியார் கூறுகின்ருர்:

''இவற்றை (தெய்விக உண்மைகளை) நமது முன்னோர் பெரிய பாடுபட்டுத் தேடித் தம்முடைய நூல்களிலே திரட்டி வைத்திருக் கிருர்கள். இந்தச் செல்வத்தை நாம் திறமையுடன் கையாண்டு உலகத்தாருக்கெல்லாம் வாரிக் கொடுத்து இவ்வுலகத்தின் துன் பங்களையும், சிறுமைகளையும் அறியாமைகளையும் மாற்றி இதனை மேன்மைப்படுத்தவேண்டும்.

'தாம்இன் புறுவது உலகுஇன்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்'

என்று திருவள்ளுவர் சொல்லியபடி, இதே சுவாமி அற்புதாநந் தருடைய கருத்தாகும். இதை நான் பரிபூரணமாக அங்கீகாரம் செய்து கொள்ளுகிறேன். ஆனல் நமது ஆசையை இவ்வள வுடன் நிறுத்திவிடலாகாது. லௌகிக விஷயங்களிலும் நமது

உதவியை உலகம் வேண்டித்தான் நிற்கிறது. இதை நாம் மறந்துவிடலாகாது.''

மாந்தர்கள் வாழ்வாங்கு வாழ அறிவினுல் பல நெறிமுறைகளைக் கண்டுபிடித்திருப்பினும் அவற்றை நடைமுறையில் நடத்திக் காட்டுதல் கடினமாயுள்ளது என்ற கருத்தை விளக்க வந்த இடத்தில் பாரதியார் 'சொல்லுதல் யார்க்கும் எளிய' என்ற குறட்பாவை மேற்கோள் காட்டி அதற்கு உரையாசிரியராக நின்று நல்ல விளக்கங்களும் தருகின்ருர். விளக்கங்கள் கொடுக்கும்போது இன்னெரு குறட்பாவும் பாரதியாரால் மேற்கோள் காட்டப்படுகிறது. 'வாசக ஞானம்' என்ற கட்டுரையில் பாரதியார் கூறும் விளக்கங்களைக் காணலாம்:

''பொதுவாகக் கூறுமிடத்தே, மனித சாதியார் அறிவு சம்பந்தப்பட்ட மட்டில் மகா சூட்சுமமான பரம சத்தியங்களையெல்லாம் கண்டு பிடித்து முடித்துவிட்டனர். ஆனுல் அறிவுக்குத் தெரிந்ததை மனம் மறவாதே பயிற்சி செய்ய வலிமையற்றதாய் நிற்கிறது. அறிவு சுத்தமான பின்னரும், சித்தசுத்தி ஏற்பட வழியில்லாமல் இருக்கிறது. எனவே, அறிவினுல் எட்டிய உண்மைகளை மனிதர் ஒழுக்கத்திலே நடத்திக் காட்டுதல் பெருங் கஷ்டமாக முடிந்திருக்கிறது. ஆத்ம ஞானத்தின் சம்பந்தமாகக் கவனிக்குமிடத்தே, இந்த உண்மையைத் தாயுமானவர்.

''வாசக ஞானத்தினுல் வருமோ சுகம் பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே''

என்ற கண்ணியில் வெளியிட்டிருக்கிருர். இதன் பொருள். ''வெறுமே வாக்களவாக ஏற்பட்டிருக்கும் ஞானத்தினுல் ஆனந்தமெய்த முடியவில்லையே? என் செய்வோம்? பாழ்பட்ட மனம் ஓயாமல் பூசலிட்டுக்கொண்டிருக்கிறதே? இந்தப் பூசல் எப்போது தீரும்? கடவுளே, நீ அதனைத் தெரிவிப்பாய்'' என்பதாம். இதே உண்மையை உலகநீதி விஷயத்தில் ஏற்கும்படி, திருவள்ளுவர்,

'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்'

என்ற குறளால் உணர்த்துகிருர்.

இதன் பொருள் ''வாயினுல் ஒரு தர்மத்தை எடுத்துச் சொல்லுதல் யாவர்க்கும் சுலபமாக ஏற்பட்டிருக்கிறது. ஆனுல் அந்தச் சொல்லின்படி நடத்தல் மிகவும் துர்லபம்'' என்பது.

திருஷ்டாந்தமாக, "ஆண்களும் பெண்களும் சமானமான ஆத்ம இயல்பும் ஆத்ம குணங்களும் உடையோராதலால், பெண்களை எவ்வகையிலும் இழிந்தவராகக் கருதுதல் பிழை" என்ற கொள்கை ஐரோப்பாவிற் படிப்பாளிகளுக்குள்ளே மிகவும் சாதாரணமாகப் பரவியிருக்கிறது. ஆயினும் பெண்களுக்கு வாக்குச் சீட்டுச் சுதந்தரம் வேண்டும் என்று கேட்டால், அதைப் பெரும்பான்மையான ஐரோப்பிய ராசதந்திரிகளும் பண்டிதர்களும் எதிர்த்துப் பேசுவதுடன் அங்ஙனம் எதிர்ப்பதற்குப் பல போலி நியாயங்களையும் காட்டவும் துணிகிறார்கள்.

"விஷ்ணு பக்தியுடையோர் எந்தக் குலத்தோர் ஆயினும் எல்லா வகையிலும் சமானமாகப் போற்றுவதற்குரியர் என்பது ஸ்ரீராமாநுஜாசாரியருடைய பரமசித்தாந்தம்" என்பதை நன்குணர்ந்த தற்காலத்து வைணவர்கள், பிராமண சூத்ர பேதங்களை மற்ற வகுப்பினரைக் காட்டிலும் அதிமாகப் பாராட்டுவது மாத்திரமன்றி இன்னும் வடகலை தென்கலைச் சண்டைகளைக் கூட விடாமல் வீண் சச்சரவுகளில் ஈடுபட்டு உழல்கின்றார்கள்.

"எல்லாச் சரீரங்களிலும் நானே ஜீவனாக இருக்கிறேன்" என்று கண்ணன் கீதையால் உணர்த்திய உண்மையையும், "எல்லா உயிர்களிடத்தும் தன்னையும் தன்னிடத்தே எல்லா உயிர்களையும் காண்பவனே காட்சியுடையவன்" என்று கண்ணபிரான் அதே கீதையிற் சொல்லிய கொள்கையையும், வேதோபநிஷத்துக்களின் முடிவான தீர்மானம் என்று தெரிந்த இந்துக்கள், உலகத்திலுள்ள மற்றெல்லா சனங்களைக் காட்டிலும், சாதி வேற்றுமை பாராட்டுவதில் அதிகக் கொடுமை செலுத்துகிறார்கள்.

"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது"

என்ற குறளின்படி, "இனிய சொற்கள் சொல்லுவதினின்றும் நன்மைகள் விளைவது கண்டும், மானிடர் ஒருவர்க்கொருவர் கொடுஞ் சொற்கள் வழங்குவது மடமை" என்பது உலகத்தில் சாதாரண அனுபவமுடையவர்களுக்கெல்லாம் தெரியும். அங்ஙனம் தெரிந்தும் கொடுஞ் சொற்களும் கோபச் செயல்களும் நீங்கியவர்களை உலகத்தில் தேடிப் பார்த்தாலும் காண்பது அரிதாக இருக்கிறது.

"மரணம் பாவத்தின் கூலி" என்று கிருத்தவ வேதம் சொல்வது எல்லாக் கிருத்தவர்களுக்கும் தெரியும். அப்படியிருந்தும், பாவத்தை அறவே யொழித்த கிருத்தவர்கள் எவரையும்

காணவில்லை. "நாமெல்லோரும் பாவிகள்" என்பதைப் பல்லவி போலே சொல்லிக்கொண்டு காலங் கடத்துகிருர்கள். இதென்ன கொடுமை! இதென்ன கொடுமை! இதென்ன கொடுமை!"

'குடும்பக் கல்வி' என்ற கட்டுரையில் குடும்ப வாழ்க்கையைச் சிறப்பித்துக் கூறும் பாரதியார் ஒரு குறளை மேற்கோள் காட்டுகிருர்:

"குடும்ப வாழ்க்கையே மற்றெல்லா வாழ்க்கைகளிலும் சிறந்தது. இதனலன்றே திருவள்ளுவர்,

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை"

என்று கூறினர்.

பிராமணன், சத்திரியன் முதலிய வருணங்கள் பிறப்பினல் ஏற்படுவதில்லை, குணம் செயல்களால் கிடைக்கும் பதவிகளே அவை என்பது பாரதியாரின் கருத்து.

"ஒருவன் தான் பிராமணனுக வேண்டும் என்று கருதினல், அவன் உண்மை ஆராய்ச்சியே முதற்காரியமாகக் கொண்டு வாழக்கடவன். சத்திரிய பதவி வேண்டுமானல், தன்னுயிர்க்கிரங்காமல் மன்னுயிரைக் காப்பதே விரதமாகக் கொண்டு வாழக் கடவன். இங்ஙனமே மற்றவையும் கொள்ளுக. குணத்தாலும் தொழிலாலும் ஏற்படுகிற மேன்மையைக் கண்டு யாரும் பழிகூற இடமில்லை. குணத்திலும் தொழிலிலும் கடைப்பட்ட ஒருவன் பிறப்பைக் காரணமாக வைத்துக்கொண்டு, "நான் மற்றவரைக் காட்டிலும் உயர்ந்தவன்" என்று சொல்லும்போது, மற்றவருக்குக் கோபம் உண்டாகிறது.

'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்'

என்று, தாம் வள்ளுவ மரபில் பிறந்தாலும் நமது முன்னேரால் பிரம தேவனுடைய அவதாரமென்று போற்றப்பட்ட திருவள்ளுவ நாயனர் சொல்லுகிருர்: ஒருவன் குணகர்மங்களால் பிரர்மணனுக இருப்பானுகின், அவனுக்கு நாட்டில் முதலாவது மதிப்புண்டாதல் பொதுவாக எல்லாத் தேசங்களிலும் இயற்கையாக நடந்துவரும் நெறி. ஏனென்றல் எல்லாத் தொழில்களுக்கும் சாத்திரமே நேத்திரம். சரீர இன்பங்களைத் தேடுவதே முதற் காரியமாகக் கொண்ட மனிதர் மிகுந்து போயிருக்கும் இவ் வுலகத்தில், சிலர் அந்தப் படியைக் கடந்து மேல் ஏறிப்போய் உண்மை

தேடுவதே முதற்காரியமென்றும், மற்றதெல்லாம் அதற்குப் பிறகுதான் என்றும் உணர்ந்து நடப்பாராயின், அவரே தலை மக்கள். மற்ற வருணத்து நெறிகளையும் இப்படியே வகுத்தறிந்து கொள்ளுதல் எளிது.''

'தராசு' என்ற நீண்ட கட்டுரைகளில் தராசின் தீர்ப்பாக நான்கு குறட்பாக்களை எடுத்துக் கூறுகிறார்:

''நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.''

இங்ஙனம் பாரதியார் திருவள்ளுவர்பால் கொண்டிருந்த அளவற்ற ஈடுபாட்டினையும், அவர்தம் உள்ளத்தில் சிறப்புற்றிருந்த குறட்பாக்கள் இவை என்பதனையும் இக் கட்டுரையில் அறிந்து கொண்டோம்.



## ஏடெழுதும் கணக்காயர்

இலக்கணமும் இலக்கியமும்
தெரியாதான் ஏடெழுதல்
கேடுநல்கும்

தலைக்கணையில் நெருப்பிட்டுத்
தலைவைத்துத் துயில்வதுபோல்
பகைவனைப் போய்

நிலைப்புற்ற தமிழ்நாட்டில்
ஆசிரிய ஞக்குவது
நீங்கவேண்டும்

கலைப்பண்பும் உயர்நினைப்பும்
உடையவரே ஏடெழுதும்
கணக்கா யர்கள்.

—புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்.

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(பரல் கூ, ௪௪கூ ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஏழாவது சிந்து முந்திய சிந்தைப்போல விளியுடன் தொடங்குகிறது. 'ஏதடி பூங்குழன் மாதரசே' என நற்றாய் தலைவியை விளிக்கின்றாள். விளியுடன் வினாவும் உளது.

''எ யாமுதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ யிரு வழியும் வினாவா கும்மே !''

புகழுக்குப் பின் நற்றாயின் இகழுரை தொடர்கிறது. தலைவி யொழுக்கில் ஐயுற்று நற்றாய் தலைவியைக் கடிகிறாள்.

''ஏதடி பூங்குழன் மாதர சேயுனக்
கீது நல்ல மதியோ—பிறர்
ஏசி யிகழ்ந்துனைச் சீசீ யெனும்படி
பேசெய்வதுன் விதியோ !''

'ஊரார் உன்னைச் சீசீயெனத் தூற்றும்படி உன் மதியை என் னென்றுரைப்பது?' என்று தாய் மகளைச் சாடுகிறாள். ''விதியின் வழி உன் மதி சென்றதோ?'' உரிய காலத்தில் ஒருவனைக் கைப் பிடித்துத் திருமணம் செய்துகொள்வதற்கு முன்னமே முருகனைக் கை தொட்டாயே, என் அன்னமே! உனக்கடுக்குமோ?''

''நாட்டிலுள் ளாரிதைக் கேட்டிடின் மெத்த
நகைப் புக்கிட மாச்சே—யொரு
நாளாகி லும்மினி மீளாது சேரும்
நமக்குமிக ஓச்சே''

களவுக் காதல் ஊராருக்குத் தெரிந்தால் எள்ளி நகைப்பா ரன்றோ! ஊர் வாயை மூட உலை மூடி உண்டா? அதன் விளைவாய் அவர் ஓச்சைப் பேச்சு நிலைத்து நின்றுவிடுமே என்றெல்லாம் புலம்புகிறாள்.

'தாய்க் கொளித்த சூலோ? வாய்க் கொளித்த உணவோ?' என்பது பழமொழி. ஆண்—பெண்ணுறவில் ஒரு வரையறை வேண்டாமோ? காமத்துக் காளானவர்க்கு அச்சம் துச்சம்;

நாணம் விரைந்தோடி மறைகிறது; பேச்சு நீள்கிறது; மிரட்டல் மிஞ்சுகிறது; உடம்பெல்லாம் வாசனைப் பொருள்களின் மணம் கமழ்கின்றது. இவற்றையெல்லாம் இந்தப் பெண் கற்றுக் கொண்டதெங்கே ?

"சூத்திர மாதரினத்தைவிடா தகைக்
கொள்ளுகிறுய்வீம்பே—அனு
கூலம்ப றிக்கெல்லாம் மூலம் குலத்துக்கோர்
கோடரி யின்காம்பே."

ஆரிய—திராவிட நாகரிகங்களின் கலப்பில் ஆரியர் குமாரனும் தமிழர் முருகனும் இணைந்து ஒரு தெய்வமாயினர். இரு நாகரிகங்களின் சின்னங்கள் தேவசேனை என்ற தெய்வானையும் வள்ளியும். பாண்டித்துரைத் தேவர் இங்குக் கையாண்டுள்ள 'சூத்திர' என்ற சொல்லுக்கு வேறுவகையாகப் பொருள் கொள்ளத் தேவையில்லை. சமூகத்தில் ஆரியரின் நான்கு பாகுபாடுகள் தென்னாட்டுக்குப் பொருந்தா.

"சாதிமுறை இந்துக்களால் இந்தோனேசியா, அன்னம், சம்பா முதலிய நாடுகளுக்குக் கொண்டுசெல்லப்பட்ட காலை அந்நாட்டில் வாழ்ந்த பெரும் பணக்காரர் இந்து சமயத்தை க்ஷத்திரிய சாதிப் பெயரான வர்மன் போன்ற பெயர்களை ஏற்று க்ஷத்திரியர் என்று கொள்ளப்பட்டனர். நான்கு சாதிகளும் பாலியில் இன்றும் நிலவுகின்றன. தென்னாட்டிலும் ஐயமின்றி இம்முறை கையாளப் பட்டது. மலையாளத்தில் தாய்வழியைப் பின்பற்றும் க்ஷத்திரியர் உள்ளனர் என்பது இதை அரண் செய்கிறது.

"சாதிமுறை விரிவடைவதில் சில பிரிவினர் தங்களினத்தைத் தொடர்ந்து பற்றிக்கொண்டு பெரும் பிரிவுகளுடன் இணைந்து கொள்ள மறுக்கும் மற்றொரு காரணமும் உண்டு. தனித்தியங்கச் சமூக அமைப்பும் உதவியது. சமூக நிலையில் உயர்நிலையிலுள்ள ஆந்திர ரெட்டிகள், கேரளத்து நாயர்கள், தமிழ்நாட்டு மறவர்கள், மராட்டியர் ஆகியோர் இந்து சமயத்தை ஏற்றுக் கொண்டவராயினும் இந்த நான்கு சாதிப் பிரிவுகளில் ஒன்றுபடவில்லை. சூத்திரர் என்ற நிலைக்குப் புகுத்துவதில் அவர்களுடைய சமூக நிலை இடம் தரவில்லை."[1]

இவ்வாறு K. M. பணிக்கர் சாதிமுறை பற்றி எழுதுகிறுர். கிறித்தவ சமயத்தைப் பரப்ப வந்த சேசுசபை வெள்ளைக்காரரும் தமிழகத்தைப் பொறுத்தவரை 'சூத்திரர்' என்பதுபற்றிச்

1. K. M. Panikkar: A Survey of Indian History.

சரியாக அறிந்திலர். "ஒரே நிலையில் அல்லது ஒரே தொழிலைச் செய்யும் குடும்பங்களின் தொகுதியைச் சாதி என்று சொல்லுகின்றனர். மொகலாயப் பேரரசு, வங்காள அரசு, இலங்கை, அதை எதிர்நோக்கியுள்ள முப்புறமும் நீரால் சூழப்பட்ட நிலப் பரப்பு ஆகியவற்றில் இவ் வேறுபாடு காணப்படுகிறது. நான்கு முக்கிய சாதிகள் உள்ளன. பிராமணர்கள் எல்லார்க்கும் மேற்பட்ட முதற் சாதியினர் என்று கருதப்படுகின்றனர். பல அரச குடும்பங்களின் தலைமுறையினர் என்ற ராஜாக்கள், சூத்திரர்கள், பறையர்கள் என்பவரும் உண்டு. இந்தச் சாதிகள் ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வுள்ள உட்பிரிவுகள் உள்ளன. பெருவாரியாகப் பரவியுள்ளவர் சூத்திரர். அப் பெரும் பிரிவில் அடங்குவர் ஓவியர், எழுத்தாளர், தையற்காரர், தச்சர், கொற்றர், நெய்வோர் ஆகியோரும் பிறரும். ஒவ்வொரு தொழிலும் உரிய சாதியைச் சேர்ந்தது."[2] பிராமணர்களைத் தவிர மற்றவர்களைச் 'சூத்திரர்' என்று குறிப்பிடும் சொல்லாட்சி வந்தது. இது பிறிதோரிடத்தில் விரிவாக ஆராயப்பட வேண்டிய பொருளாகும்.

குலத்துக்கே கோடரிக் காம்பாகிவிட்டாளே என்று தலைவியைக் கடியும் நற்றாய் மகளின் கண்கள் சிவந்து விட்டதையும் சேற்றிதழ்ச் செங்கமல இதழ்கள் வெண் சங்குபோல் வெளுத்துப் போனதையும் சொல்லி மறுகுகின்றாள். இரண்டு பெண்டாட்டிகளை மணந்த வடிவேலன் காதல் கொண்டாலும் அதை மெய்யுறவென்று கொள்ளலாகாது என்றும் தாய் சொல்லுகிறாள்.

"ஏதடி பூங்குழன் மாதர சேயுனக்
கீது நல்ல மதியோ—பிறர்
ஏசி யிகழ்ந்துனைச் சீசீ யெனும்படி
யே செய்வதுன் விதியோ

ஆதர வாயொரு நாதனைத் தேடிக்கல்
யாணஞ் செய்யு முன்னமே—யன்பர்
ஆனவர் சேர்சிவ ஞானபு ரேசனை
அங்கே தொட்டா யன்னமே.

நாட்டி லுள் ளாரிதைக் கேட்டி டின் மெத்த
நகைப்புக்கிட மாச்சே—யொரு
நாளாகி லும்மினி மீளாது சேரும்
நமக்குமிகழ ச்சே.

---

2. Letter of Fr. P. Martin to Fr. Le Gobien dt. 1st June 1700.

மோட்டு மதகரிக் கோட்டிளங் கொங்கை
முழுதும்ாக வரியே—கட்டி
முத்தங்கொ டுத்தகன் னத்தினிற் காணுதம்
முன்னவன்பற் குறியே.

சேவற்கொ டியோன்மே லாவலி ருந்தாலுஞ்
சேருந்ததி யீதோ—சற்றே
சிந்தித்துப் பாருன்றன் தந்தைத மையன்மார்
செய்தி தெரியாதோ.

மேவிய காமிக ளானவர்க் கச்சமும்
வெட்கமும் நண்ணாதே—யென்முன்
வேண படிக்செல்லாம் வீணகப் பேசி
மிரட்டிட வெண்ணாதே.

மெத்தநறுங்கள பத்தின் பரிமளம்
மேனியெல் லாம்வீசுதே—யிந்த
விந்தையை யெங்கே படித்தாய் நீயென்று
விளம்பவும் வாய்கூசுதே.

சூத்திர மாதரி னத்தைவி டாதுகைக்
கொள்ளுகி றாய்வீம்பே—அது
கூலம்ப ழிக்கெல்லாம் மூலம் குலத்துக்கோர்
கோடரி யின்காம்பே.

சாதனை செய்யவொண் ணாதிரு கண்களும்
சாலச்சி வந்திட்டதே—அடி
தையலே யுன்னிதழ் செய்ய கரத்தணி
சங்குபோ லாய்விட்டதே.

மாதரி ருவரைக் காதலித் தாலும்
வடிவேல னுன்மீதே—யின்று
மையல்கொண் டாலுர்நீ மெய்யுற வென்று
மதித்திட லாகாதே.”

இந்தச் சிந்துப் பாடலில் செந்தமிழ்த்தேன் நனி சொட்டுகின்றதன்றோ! (தொடரும்)

---

## செல்வம்

செல்வத்தை மட்டும் திரட்டிவிடு; உலக முழுவதும் சேர்ந்து உன்னை ஒரு பண்பாளன் என்று கூறத் தயங்காது

—பெர்னர்டு ஷா

# தக்கன் பெருவேள்வி தகர்த்தோன்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)
23, கல்யாண்ஜி வீதி, பொள்ளாச்சி.]

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரிபவராகக் கருதப்படும் அயன், அரி, அரனாகிய மூவரில் சிவபெருமான் அழிக்கும் தன்மையைக் கொண்டவனாகக் கருதப்படுகின்றான். எனவே அவன் பேராற்றல் மிக்கவனாகப் பரவப்படுகிறான். அவனது வீரச்செயல்கள் எட்டு எனப்படுகின்றன. அவை அட்ட வீரட்டங்கள் என்றும், அவை நிகழ்ந்த இடங்கள் அட்ட வீரட்ட தலங்கள் என்றும் போற்றப்படுகின்றன.

''காவிரியின் கரைக்கண்டி வீரட் டானம்
கடவூர்வீ ரட்டானம் காமருசீர் அதிகை
மேவியவீ ரட்டானம் வழுவைவீ ரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டம் குறுக்கைவீ ரட்டம்
கோத்திட்டைக் குடிவீரட் டானம்'' (6-71-2)

என்ற நாவுக்கரசர் பாடலில் அவை எட்டும் கூறப்பட்டுள்ளன. அவை (1) பிரமன் சிரங்கொய்த திருக்கண்டியூர், (2) காலனை உதைத்த திருக்கடவூர், (3) திரிபுரத்தை எரித்த திருஅதிகை, (4) யானையை உரித்த வழுவூர், (5) தக்கன் சிரங்கொய்த திருப்பறியலூர் (6) அந்தகாசுரனை அழித்த திருக்கோவலூர், (7) காமனை எரித்த திருக்குறுக்கை, (8) சலந்தரா சுரனை அழித்த திருவிற்குடி.

பெருக்காறு சடைக்கணிந்த பெருமானின் எட்டு வீரச்செயல்களில், தக்கனது பெருவேள்வியைத் தகர்த்து, அவனது சிரங்கொய்தது ஒன்றாம். நான்முகனின் மகனாகிய தக்கன் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து சக்தியைத் தனது புதல்வியாகப் பெறும் பேறுபெற்றவன். தக்கனுடைய மகள் என்பதால் தாட்சாயணி என்ற பெயரையும் சக்தி பெற்றாள். தக்கன் அவளைச் சிவபெருமானுக்குத் திருமணம் புரிந்து வைத்தான். தனக்கும் சிவபெருமானுக்கும் ஏற்பட்ட மனவேற்றுமை காரணமாக, தக்கன் தான் செய்த வேள்விக்குச் சிவபெருமானை அழைக்கவில்லை. மேலும் அழைப்பின்றி வந்த தன் மகள் தாட்சாயணியையும் அவமதித்தான்.

எனவே இவனது வேள்வியை அழிக்க அண்ணலும் அன்னையும் வீரபத்திரரையும், காளியையும் அனுப்பினர். வேள்வி தகர்க்கப் பட்டு, அதில் கலந்துகொண்ட வானவர் அனைவரும் தக்கபடி தண்டிக்கப்பட்டனர். தக்கனது சிரம் கொய்யப்பட்டது. பிரமா வின் வேண்டுகோளின் பேரில் தக்கனது குறையுடலை "வித்தக வலிகொள் பூதம் வீரபத்திரன் தன் முன்னர்" வைத்தது. வேள்வி யில் பலியிடப்பட்ட ஆட்டின் தலையொன்றைத் தக்கனது குறையுட லுடன் வைத்து எழுக என்றலும், தக்கன் உயிர் பெற்றான். "தன் தகவை, இழந்து பெற்ற தலைகொடு வணங்கி நாணி"ச் சென்றதாகக் கந்தபுராணம் குறிப்பிடுகிறது. இந் நிகழ்ச்சியை,

"தக்கன்தன சிரம்ஒன்றினை அரிவித்து அவன் தனக்கு
மிக்கவ்வரம் அருள்செய்தஎம் விண்ணோர் பெருமான்"

என ஞானசம்பந்தரும்,

"எச்சன்வினைத் தலைகொண்டார் பகன்கண் கொண்டார்
இரவிகளில் ஒருவன்பல் இறுத்துக் கொண்டார்
மெச்சன்வியத் திரன்தலையும் வேறுக் கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்த
உச்சநமன் தாள்அறுத்தார் சந்திரனை உதைத்தார்
உணர்விலாத் தக்கன்தன் வேள்வி யெல்லாம்
அச்சம் எழ அழித்துக்கொண்டு அருளுஞ் செய்தார்" (6-947)

என அப்பரும் போற்றித் தக்கனது பெரு வேள்வி தகர்த்த தழல் வண்ணனின் திறத்தை வியக்கின்றனர்.

"கொண்டாடுதல் புரியாவரு தக்கன் பெருவேள்வி
சென்டாடுதல் புரிந்தான்" (7-82-9)

எனச் சுந்தரர் அழகாகக் குறிப்பிடுகிறார்.

சிவபெருமானின் வீரச் செயல்களில் காமனை எரித்தது, காலனை உதைத்தது, முப்புரங்களை எரித்தது, மற்றும் யானை உரி போர்த்தது ஆகியவை அதிக அளவில் சிலாவடிவங்களாகக் காணப்படுகின்றன. ஏனையவற்றைக் காண்பது அரிதாம். அத்தகைய அரிய வடிவம் ஒன்று அம்பை வட்டத்திலுள்ள திரு வாலீசுரம் கோயிலில் உள்ளது.

சிற்பக்கலை வல்லுநர்களால் சிற்பக் கருவூலம் எனப் புகழப் பெறுவது திருவாலீசுரம் கோயில். இது பாண்டிய நாட்டில் உள்ள இடைக்காலச் சோழர்களது மிகச்சிறந்த படைப்பாகும். இந்த ஆலயத்தின் விமானத்தின் தென்பகுதியில் ஆடவல்லான்,

ஆணோடு பெண்ணாகிய பெம்மானுடைய ஐந்து வடிவங்கள் உள்ளன. அவற்றிலே ஒன்று தக்கனுக்கு அருள்பாலிக்கும் வடிவம். அண்ணல் நான்கு கைகளுடன் திரிபங்க நிலையில் தலையில் சடா மகுடத்துடன் காணப்படுகின்றான். பின்வலக்கையில் மழு உள்ளது. முன்இடக்கை தொடையின்மீது அஃதாவது கத்ய வலம்பித முத்திரையில் உள்ளது. அவன் நிற்கும் நிலை எதிரே உள்ள தக்கனுக்கு ஆசி வழங்குவது போன்று உள்ளது. தக்கனுக்குப் பின்னால் அன்னை இரு கரங்களுடன் சமபங்க நிலையில் அமைக்கப் பட்டுள்ளாள். தக்கனுக்கு இடப்புறம் பூதம் ஒன்று காணப் படுகிறது. அது தக்கனது கழுத்தின்மேல் உள்ள ஆட்டின் தலையைப் பிடித்துக்கொண்டுள்ளது. தக்கன் உட்கார்ந்த நிலையில் ஆட்டின் தலையுடன் காணப்படுகிறான். இஃது ஓர் அரிய கலைப் படைப்பாகும்.

---

## "அருள்க தமிழே!"

[பாவலர் நிறைவாணன், க. மு.]

"ஓராயிரம் விழிகள்
　　ஒருமித்த உளங்கொண்டு
　　　　எமைநோக்க வைத்த தமிழே!

ஈராயிரம் ஆண்டு
　　இன்னல்கள் பலதழுவி
　　　　இலக்கியந் தந்த தமிழே!

மூவாயிரம் மொழிகள்
　　முதுவையங் கண்டாலும்
　　　　மூத்தவள் : அன்னை ; தமிழே!

நாலாயிரம் பகைவர்
　　நாள்தோறும் எதிர்த்தாலும்
　　　　நலிவின்றி வாழும் தமிழே!

ஐயாவும் அண்ணாவும்
　　அகிலத்தில் ஒளிவீச
　　　　அருங்கதி ரான தமிழே!

மெய்யாகப் போற்றினேன் :
　　முப்போதும் வாழ்த்தினேன் ;
　　　　முன்னின்று அருள்க தமிழே!"

## பார்மின்! நூல்கள் தேர்மின்!

[புலவர் பொன். முனியப்பன், கூவலூர்]

1. பதினாறு சொற்பொழிவு நூல்கள்!—பாங்காய்த்
தமிழ்ப்பெருமை நிறுத்துகின்ற கால்கள்!—ஏங்கா
திருப்பதற்காய்த் திருவிளக்கும்
பெருஆடல் அருமைகளைப்
படைத்தார்—இடரை
உடைத்தார்.

பதினேழாம் பொழிவுநூல் கண்டார்—பழகு
தமிழ்மதுரை தனில்விழவு கொண்டார்—கழக
ஆட்சியரின் நீட்சிமிகு
மாட்சியமை காட்சிகளைப்
பார்மின்!—நூல்கள்
தேர்மின்!

2. அமைச்சருடன் துணைவேந்தர் வந்தார்—ஆடல்
அருமைகளைப் பதினொருவர் தந்தார்—பாடல்
புகழமைந்த தகவுடைய
நகர்மதுரை அகமுவக்க
மொழிந்தார்—தமிழ்
பொழிந்தார்.

இமைப்பொழுதும் சோர்வறியாக் குரிசில்!—கழக
ஆட்சியராய் இலங்கும்நம் பரிசில்!—அழகு
விழாக்களினால் பலாச்சுளையாய்
நிலாத்தமிழை உலாவரவே
செய்தார்—நன்மை
பெய்தார்.

3. எத்திக்கும் தித்திக்கும் பால்!—யாரும்
கழகம்போல் கொடுப்பதில்லை நூல்!—தேரும்
சிறப்பெல்லாம் பிறப்பிக்கும்
தரம்மிக்க அறக்கழகம்
வாழ்க!—பணியால்
நீள்க!

முத்தமிழின் புகழுக்கோர் வான்!—தமிழாய்
முகிழ்த்திலங்கும் ஆட்சியாளர் தேன்!—அமிழ்தாய்ப்
பயன்கொடுத்து இயக்கவல்ல
நயஞ்சான்ற உயர்நூல்கள்
தருக!—மேன்மை
பெறுக!

———

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை]

## 8. SUBURBAN TERMINAL

ஆட்சி மொழித் துணுக்குகளைத் தொகுப்பதற்கு நண்பர்கள் என்னை மிகவும் ஊக்கி வருகின்றார்கள்! அவ்வப்போது பொன்னுரைகளை வழங்கிப் புதிய ஊக்கம் பெறச் செய்கின்றார்கள்! அவர்களுக்கெல்லாம் முதற்கண் நன்றி தெரிவித்துக்கொள்ள வேண்டும்!

இப்போது நண்பர் ஒருவர் கூறியிருக்கிறார்! "Terminal என்பதற்குத் தமிழில் பெயர் கிடையாது! முடிவிடம் என்னும் அகராதிப் பொருள் தொடங்குமிடத்தைக் குறிக்காது! ஆகவே மத்திய தொடர்வண்டி நிலையத்தார் Suburban terminal என்னும் பெயரில் உள்ள terminal என்னும் சொல்லை மொழி பெயர்க்காமல் அப்படியே எழுத்துப் பெயர்ப்பாக எழுதியுள்ளார்கள்". இவையே அவர் உதிர்த்துள்ள அரிய கருத்துக்கள்!

Terminus என்பதற்கு நாம் இதுவரை பயன்படுத்தி வரும் மொழிபெயர்ப்பு "முடிவிடம்" என்பதுதான். Location என்னும் சொல்லை "அமைவிடம்" என்று மொழி பெயர்த்துள்ளோம். அதே முறையில் terminus என்பதை "முடிவிடம்" என அமைத்துள்ளோம். "இது தொடங்குமிடமும் ஆயிற்றே. அவ்வாறாயின் முடிவிடம் என்று மட்டும் சொன்னால் போதுமா" என்பதுதான் நண்பரின் வினவாகும்.

Terminal என்னும் சொல்லின் பொருள் Railway or airway terminus ஆகும். எனவே terminal, terminus, என்னும் இரண்டு சொற்களும் ஒரே பொருளையுடையன என்பதை அறிகின்றோம். Railway terminus, Airway terminus என்று சொல்வதைப் போல, இப்போது Bus terminus என்று சொல்லும் வழக்கமும் ஏற்பட்டுள்ளது.

Terminus என்னும் சொல்லின் ஆங்கில விளக்கத்தைப் பார்த்தால், அது the last station or end of a raiway line etc என்றுதான் கொடுக்கப்பட்டுள்ளது. "கடைசி நிலையம்" அல்லது "முடியும் இடம்" என்றுதானே இருக்கிறது? "தொடங்கும் இடம்" என்னும் விளக்கம் ஆங்கிலத்தில் இல்லையே!

சில அகராதிகளில் an end point of a route என்னும் விளக்கமும் கிடைக்கின்றது. நிலையத்தை நெருங்கி வந்துவிட்டோம் என்று சொல்வதைவிட, இனிய மொழி பெயர்ப்பை எட்டிப் பிடித்து விட்டோம் என்று சொல்லுதல் பொருத்தமாகும்.

நன்னம்பிக்கை முனையைப்பற்றிப் படித்திருக்கின்றோம். குமரி முனையின் சிறப்பைப் பாரதியார் அழகுறப் படம் பிடித்துள்ளார். பாரி முனையை அன்றாடம் பார்த்து வருகின்றோம். இவை யாவும் end-pointகள் ஆகும்.

தொடக்கத்தையும் முடிவையும் தமிழில்தான் நன்றாகச் சொல்ல முடியும். சொற்களில் ஆர்வமுடையோர் எல்லையற்ற சொற்களை எடுத்தாள்வர். எல்லை வரையில் போய்வர எல்லாருக்கும் முடியாது ; ஒரு சிலருக்கே இயல்வதாகும். "முனை வரையில் சென்று வருக" என்று பணிக்கப்பட்டால் கூட, ஏதேனும் ஓர் விளிம்பைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்துவிடுவர்! உண்மையான பற்றாளரோ உயிரினும் மேலான தமிழ்மொழியின் எல்லை காண எந்நேரமும் முயன்றுகொண்டே இருப்பர்.

Terminal வரையில் வந்துவிட்டோம். அதுதான் "எல்லை முனை". எல்லையில் நின்று பார்த்தால் எல்லாவற்றையும் காணலாம். ஆம். முடியும் இடத்தையும் தொடங்கும் இடத்தையும் ஒருங்கே காணலாம்.

Suburban terminal = புறநகர் எல்லை முனை.

---

## அறநெறி போற்றப்படுமா?

அறம் ஒன்றே வல்லமையானது, அதற்கே வணங்கி வாழ வேண்டும் என்று உணர்த்திய வீரர் அவர். (புத்தர்) அவர் காட்டிய நேரிய வழியைப் போற்றும் அளவுக்கு மக்களின் மனத்தில் உரம் இல்லை. மக்களின் இந்த மனப்பான்மையைப் பயன்படுத்திக் கொண்ட தந்திரக்காரர், அற்புதங்களைக் காட்டிச் சமயத்தை வளர்க்கத் தொடங்கினர். அறநெறி என்னும் நேரிய வழியை மறந்து, அற்புத நெறியாகிய குறுக்கு வழியில் சென்று மக்கள் மயங்கினர். இந்த மயக்கம் இன்னும் தீரவில்லை. இன்றும் சமயங்கள் எல்லாம் அற்புதங்களின் அடிப்படையிலேயே வளர்க்கப்படுகின்றன. அறிவியல் உண்மைகள் போல, வாழ்வின் சட்டங்கள் நேரிய முறையில் விளக்கப்படவில்லை.

—டாக்டர் மு. வரதராசனர்

# "சங்கக் கூத்தும் தெருக் கூத்தும்"

[டாக்டர். அ. அறிவுநம்பி, எம். ஏ., பிஎச் டி.,

தமிழ்த்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.]

தமிழகத்தின் மிகப்பழைமை வாய்ந்த கலைகளுள் ஒன்று தெருக்கூத்து. நாட்டுப்புறக் கலைகளான பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகங்களுக்கு முன்னோடியான தெருக்கூத்து மிகமிகப் பழைமையானது என்பதற்கு அதன் வாய்மொழித் தன்மை, முழுவதும் பாடல்களாய் அமையும் பாங்கு, நடனத்தொடு இயைந்து வரும் தன்மை, களம், காட்சி என்ற பிரிவுகள் இல்லாமை போன்றவை காரணமாகின்றன. அதன் தோற்றுவாய் எக்காலமென ஓர்தல் அவசியமாகிறது.

"நாடகங்களில் இருபெரும் பிரிவுகள் இருந்தன. அவை வேற்றியல்' (வேத்தியல்) என்றும் 'பொதுவியல்' என்றும் கூறுவர். நாகரிகம் மிக்கவர் கலைப்பாணியில் உயர்ந்தவர் அனுபவிக்கின்ற நாடகங்களை 'வேத்தியல்' நாடகங்கள் என்வும், 'சாதாரணப் பொதுமக்கள் அனுபவிக்கின்ற நாடகங்களைப் 'பொதுவியல்' நாடகங்கள் என்றும் பிரித்தார்கள்"[1] என்பர். இவ்விரு வகைக் கூத்துகளையும் சிலப்பதிகாரம் அழகுபட மொழிகிறது. கூத்தச் சாக்கையன் ஆடிய கொட்டிச் சேதம் எனப்படும் கூத்து தெருக்கூத்து எனலாம். ஏனெனில் இன்றைய கேரளத்தில் சாக்கையர்கள் ஆடும் கூத்து, தமிழகத் தெருக்கூத்தின் மலையாள வடிவமே. எனவே, சிலம்பிற்கு முன்பே தெருக்கூத்து வழக்கிலிருந்திருக்க வேண்டும். "கி.பி. 225இலிருந்து ஏறக்குறைய எல்லாவிதமான கூத்து முறையும் வளரத்தொடங்கிற்று"[2] என்பார் வெல்ஸ் என்ற அறிஞர்.

வி. கோ. சூரிய நாராயண சாத்திரியார் ".........பெருமை வாய்ந்த நாடகத் தமிழின் தோற்றமென்னை? தமிழ்நாடகம் முதலில் உண்டானது மதவிடயமாகவே என்பது துணியப்படும். அது கடவுளர் திருவிழாக் காலங்களில் ஆடல் பாடல்கள் இரண்டையும் சேர நிகழ்த்துவதனின்றும் உண்டாயிற்று..........

1. இராம. கோபிநாதன் (மொ. ஆ.) மலையாள இலக்கிய வரலாறு, ப. 18.

2. தே. ஆண்டியப்பன் "கூத்தர் தமிழ்" வையை, மூன்றும் மலர், ப.140.

கி.மு. மூன்றும் நூற்றூண்டினதல் அல்லாக்கால் அதனினுஞ் சற்று முற்காலத்தினதல் நாடகத்தமிழ் உயர்நிலையுற்றிருத்தல் வேண்டும்''[3] என்பார். இன்றும் தெருக்கூத்து மதவிடயமாகவே, கடவுளர் திருவிழாக் காலங்களில் ஆடப்படுகின்றது என்பது நோக்கற்குரியது. சங்க காலத்தில் கூத்தரை மற்றெருரு கூத்தர் குழாம் ஆற்றுப்படுத்தியதாகக் 'கூத்தராற்றுப்படை' என்ற தனி நூலொன்று எழுமளவிற்குக் கூத்து வளம் பெற்றிருந்ததை உணருதல் வேண்டும்.

''மன்றுதொறு நின்ற குரவை, சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டம் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாட்
சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு
முந்தை யாமம் சென்ற பின்றை''    (615 - 620)

என்ற மதுரைக்காஞ்சி வரிகள் கூத்தைப்பற்றிக் கூறுகின்றன. இரவில், உரை, பாட்டு, ஆட்டம் கலந்ததாகக் கூத்துகள் நிகழ்ந்தமையையும், நன்னனது பிறந்த நாளில் விழாவில் கூத்து அமைந்தமையையும் இவ் வரிகள் இயம்பும். சிறுத்தொண்ட நாயனார் பிறந்த பரணி நாளில் தென்னார்க்காடு கள்ளக்குறிச்சி வட்டத்தில் 'சிறுத்தொண்டர் கூத்து' நடைபெறுவது இன்றுமுண்டு. ஒருவரது பிறந்தநாள் விழாவில் கூத்தாடும் சங்ககால மரபு தெருக்கூத்தில் காணப்படும் ஒன்றெனக் காணுகின்றோம். இதைப் போலவே முதுவாய்க் கோடியரது இசைக்கருவிகளைச் சங்க நூல்கள் காட்டும். யாழ், பதலை எனப்படும் ஒருதலை முழவு, மத்தளம் ஆகியவை அவை. யாழ் இன்று வழக்கிலில்லை. ஆனால் மத்தளமும், தபேலா எனப்படும் பதலையும் கூத்திலுண்டு. பதிற்றுப் பத்தில் காணலாகும் கூத்துச் செய்திகள் பல. தெருக்கூத்தில் இன்றும் ஆடுகளம் அடையும் கூத்தர்கள், 'களரி கட்டுதல்' அல்லது 'களரி கூட்டுதல்' என்ற பெயரில் கூத்தின் தொடக்கத்தை இசை முழக்கிக் காட்டுவர். சங்ககாலக் கூத்தர்களும் ஊர்ப்பொதுமன்றிடை வந்து யாழ் மீட்டித் தம் வரவைப் புலப்படுத்துதல் உண்டென்பதைப் பதிற்றுப்பத்து (3 : 3 : 5-6) விளக்கும்.

''மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள்''

---

3. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், தமிழ்மொழியின் வரலாறு, ப. 51.

என்ற வரிகளுக்கு ''வயிரிய மாக்கள் கூத்தர். இக் கூத்தர் முதற் கண் ஊர்மன்றத்தை யடைந்து தம் இசைக்கருவியை இசைத்துத் தம் வரவு தெரிவித்தல் மரபாதலின் 'மன்றம் போந்து' என்றார்''[4] என்ப. பதிற்றுப்பத்தில் 47ஆம் பாடலில் வரும் 'பாண்டில் விளக்கின் பரூஉச்சுட ரழல' என்ற வரிக்கு உரையெழுதும் வேளையில் மண்ணெண்ணெய் விளக்குகள் வருமுன்னர் வழக்கி லிருந்த வரிச்சில் விளக்குகளை விளக்குவர். தீவட்டி ஏந்தி ஆடு களம் புகும் தெருக்கூத்தொடு இப்பகுதி ஒப்புநோக்கற் குரித்து. இரவில் விழாவில் இசையுடன் அமையும் சங்கக் கூத்தின் ஆடு களம் திறந்தவெளியரங்காகவே இருந்தமையை மேற்சுட்டிய வரிகள் சுட்டும். ''திறந்தவெளி நாடக அரங்கம் அமைப்பது நமக்குப் புதிதன்று. பண்டைக் காலத்திலேயே நாடகம், நடனம், பிற கூத்து வகைகள் எல்லாம் திறந்தவெளி மேடைகளில்தாம் நடைபெற்று வந்தன. தமிழ்நாட்டின் சிறப்புக்குரிய கோயில் களில் எல்லாம் விழாக்காலங்களில் அன்றும் இன்றும் கலை நிகழ்ச்சிகள் பெரும்பாலும் திறந்தவெளிகளிலேதான் நடை பெற்று வருகின்றன. இந்தத் திறந்தவெளி அரங்குகளைத் 'தெருக்கூத்து மேடைகள்' என்று மக்கள் குறைவாகக் கருதி வந்தார்கள், சென்ற பல ஆண்டுகளாகத் திறந்தவெளி அரங் கின் நினைவு மாறாமல், அழியாமல் பாதுகாத்து வந்தவர்கள் தெருக்கூத்து ஆடியவர்கள்தாம் என்பது மறுக்கமுடியாத உண்மை''[5] என்பது நாடகக் கலைஞர் ஔவை சண்முகனாரின் கருத்து.

சங்க காலக் கூத்துக்கள் இன்றைய தெருக்கூத்தைப் போன்றவை என்பதைப் பா வரிகளாலன்றி இலக்கிய வடிவத் தும் காணலாம். ''நாடகக் காட்சிகள் கலித்தொகையில் மிகவும் சிறப்பாக அமைவதைக் காணலாம். ஒருத்தி ஊர்க்கால் நிவந்த சோலைவழி நிலா கதிர்சிந்துவது போல் சிரித்த முகத்தோடு நடைபயின்று வருகின்றாள். அதனைக் கண்ட ஆடவன் காதல் கொண்டு,

''ஈங்கே வருவாள் இவள் யார்கொல்; ஆங்கேஓர்
வல்லவன் தைஇய பாவைகொல்; நல்லார்
உறுப்பெல்லாம் கொண்டு இயற்றியாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவம் கொண்டதோர் கூற்றம் கொல்''

என்று பலவாறு ஐயங்கொண்டு பேசுவதும், இவளைச் சொல் லாடிக் காண்பேன், தகைத்தென்று நெருங்குவதும், நல்லாய்

4. பதிற்றுப்பத்து (ஔவை சு. து. உரை) ப. 90
5. ஔவை சண்முகம், 'எனது நாடக வாழ்க்கை' ப. 49.

கேள் என்று பேச முற்படுவதும் சிற்றூர்ப் புறங்களில் நடை பெறும் தெருக் கூத்தைப் போன்றே அமைகின்றன. அங்கு அரங்கின் இரு ஓரங்களில் வீரனும் மங்கையும் வந்து நிற்கும் காட்சி தொடங்கும். யாரிவள்? சந்திரனோ? தேவருலகத்துப் பெண்மணியோ? இங்கு — இப்போது — இவளோடு — பேசிப் பார்க்கலாமென வசனம் பேசும் முறைக்கும் கலித்தொகை அமைப் பிற்கும் வேறுபாடில்லையல்லவா''[6] என்று பானைச் சோற்றின் பதச்சோறு போலச் சான்று காட்டுவார் தே. ஆண்டியப்ப பிள்ளை.

சங்க காலத் தமிழக எல்லை பரந்தது. அதனெல்லை, 'வட வேங்கடம் தென்குமரி'. இப் பாப்பில் அன்று நிகழ்ந்த கூத்துத் தன்மை இன்றும் வாழலாம். தெருக்கூத்து என்ற பெயரமைப் பைப் போலவே, 'வீதி நாடகம்' என்ற பெயரிலமையும் ஆந்திரக் கூத்தும், தெருக் கூத்திலமைப்பிலே அமையும் 'சன்னுட்ட' என்ற பெயரிலமையும் கருநாடகக் கூத்தும், சாக்கையர்கள் ஆடும் கூடியாட்டம் உட்படத் தெருக்கூத்தைப் போன்று நிகழும் மலையாளக் கூத்தினங்களும் ஒரு நீர்மைத்தாக அமையக் காண லாம். இவற்றை மீட்டுருவாக்குவதன்மூலம் பண்டைத் தமிழ கத்தின் கூத்தின் செய்திகளைப் பெறக்கூடும் எனபது தனி ஆய்வாகும். சங்க காலக் கூத்தின் மரபிலேயே இன்றைய தெருக்கூத்தும் அமைகின்றது. இதனுல் தெருக்கூத்து இயைபு களின் தோற்றுவாய் சங்ககாலக் கூத்தாக அமைவதை உணரலாம்.

---

6. தே. ஆண்டியப்பன், மேற்சுட்டிய கட்டுரை, பக்கம் 142-143

———

---

# செய்திகளும் குறிப்புகளும்

## மகாகவி பாரதியார் நூற்றுண்டு விழா

கருமபுரி மாவட்டம் மகாகவி பாரதியார் நூற்றுண்டு விழா 8—8—82 அன்று, தருமபுரி வன்னியர் திருமண மண்டபத்தில், மாண்புமிகு தொழில்துறை அமைச்சர் கே. ஏ. கிருட்டிணசாமி அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள், தருமபுரி ஒன்றியம் வெண்ணாம்பட்டி பள்ளிக்கூடக் கட்டிடத்திற்குப் பாரதி பெயர் சூட்டி நிறைவுவிழாப் பேருரையாற்றினர். மாண்புமிகு சட்டப்பேரவைத் தலைவர் க. இராசாராம் அவர்கள் பாரதியார் படத்தைத் திறந்து வைத்துச் சிறப்புரையாற்றினர். புலவர் புலமைப்பித்தன் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. திரு. எம். எஸ். சீனிவாசன் இ. ஆ. ப. கண்காட்சியைத் திறந்து வைத்தனர். பெருமக்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர். இவ் விழாவினை யொட்டி, ஊர்வலம், கலை நிகழ்ச்சி, பட்டி மன்றம் முதலியனவும் நடைபெற்றன.

## இலொயோலா கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் க. ப. அறவாணன்

மேற்கு ஆப்பிரிக்க செனகால் நாட்டுத் தக்கார் பல்கலைக்கழக ஆப்பிரிக்க ஆய்வகத்தில் கடந்த ஐந்தாண்டுகளாக ஆராய்ச்சிப் பணியாற்றி வந்த டாக்டர் க.ப.அறவாணன் அவர்கள், தாம் மேற்கொண்ட பணியினை வெற்றியுற நிறைவேற்றி மீண்டும் சென்னை வந்துள்ளார். அவர் இப்போது சென்னை இலொயோலாக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளார். திரு அறவாணன் அவர்கள் தமிழ்மொழி வல்லுநராக மட்டுமன்றி ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மொழிகளையும் நன்கு பயின்றவர். தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட இவர் மலையாள மொழியில் பேசும் ஆற்றல் படைத்தவர், சிறந்த பேச்சாளரும் எழுத்தாளருமான இவர்தம் தலைமையில் இலொயோலா கல்லூரியின் தமிழ்த்துறை சிறப்புறுமாக.

## பிறமொழி ஆய்வு மாணவர்களுக்குத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் உதவித் தொகை

பிறமொழி இலக்கியத்தைத் தமிழில் மொழி பெயர்க்கவும், தமிழ் இலக்கியத்தைப் பிற மொழிகளில் மொழிபெயர்க்கவும் தமிழ்ப்பல்கலைக் கழகம் ஒரு திட்டம் தீட்டியுள்ளது. இதன்படி தெலுங்கு, மலையாள, கன்னட ஆய்வாளர்கட்கு இரண்டாண்டு காலம் படிக்க உதவித்தொகை அளிப்பதோடு, மூன்று தமிழ் ஆய்வாளர்களை ஆந்திரம், கேரளம், கர்நாடகப் பல்கலைக் கழகங்கட்கு அனுப்ப வகை செய்யப்பட்டுள்ளது.

## அருள்மிகு பாலசுப்பிரமணிய பக்தஜன சபை 79ஆம் ஆண்டுவிழா

சென்னை இராயப்பேட்டை அருள்மிகு பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 79ஆம் ஆண்டுவிழா 8—8—82 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. சிறப்பு வழிபாடு, திருமுருக விசாகசம்பி, சுந்தரம் குழுவி

னரின் திருமுறை ஓதல் ஆகியன நடைபெற்றன. உயர்நீதிமன்ற நடுவர் உயர்திரு சாமிக்கண்ணு அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். முதறிஞர் திரு. நாரண துரைக்கண்ணனார், டாக்டர் இந்திரா சோமசுந்தரம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். திரு. வே. த. கிருட்டிணசாமி நன்றி நவில விழா இனிது முடிந்தது.

---

## 'வாளெழுபது'—ஒரு வேண்டுகோள்

கம்பர் இயற்றிய ஏரெழுபது, ஒட்டக்கூத்தர் இயற்றிய ஈட்டி யெழுபது என்னும் நூல்களைப் போலவே, தன்ம புத்திரன் என்பவர் 'வாளெழுபது' என்னும் நூலை இயற்றியுள்ளார். இராமபிரானுடைய தொண்டராகிய 'குகன்' மரபில் வந்தவர்கள் மறவர்கள் என்றும் இம் மறவர்கள் பாண்டிய மன்னனுடைய ஆட்சியில் இருந்த 'ஐந்து கோட்டை'ப் பகுதியைப் பெற்று ஆளும் உரிமை பெற்றிருந்தனர் என்றும் இந்நூல் கூறுகின்றது. இவர்கள், 'ஐந்து கோட்டை வன நாட்டு மறவர்' என்ற சிறப்புப் பெற்றிருந்தனர். இந்த நூலின் அச்சுப் படி ஒன்றைச் சென்னை கிறித்துவக் கல்லூரி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியராயிருந்த வித்துவான் சாம்பசிவ சர்மா அவர்கள் அளித் தார்கள். அதன்கண் தொடக்கத்திலிருந்து நாற்பது செய்யுட்கள் மட்டுமே உரையுடன் உள்ளன. எஞ்சிய பகுதியில்லை. இந்த நூலை யேனும் நாற்பகுதியையேனும் வைத்திருக்கும் அன்பர்கள் தெரிவித் தால், அதனைப் பெற்று அச்சிட விரும்புகின்றோம். சிற்றிலக்கியங்கள் மறைந்து போகாமல் பாதுகாக்கும் கழகத்தின் நோக்கம் இதனால் நிறைவேறும்.

---

## கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் மறைவு

நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவரும், கம்பராமா யணத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவருமான காரைக்குடி சா. கணே சன் அவர்கள் தமது 74ஆவது அகவையில், கோயமுத்தூரில், 28—7—82 இல் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்து கிறோம்.



திரு. கணேசன் அவர்கள் அரசியலிலும், தமிழ் இலக்கியத்திலும் மிகுந்த பற்றுடையவர். நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு மூன்று முறை சிறை ஒறுப்புக்குள்ளாயினர். 1957ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி இராசாசி அவர்கள் அமைத்த சுதந்திரக் கட்சியில் சேர்ந்து அக் கட்சியின் தமிழ்நாட்டுப் பிரிவின் தலைவராக விளங்கினார்.

1938இல் காரைக்குடியில் கம்பன் கழகத்தை நிறுவி அதன் மூலம்

ஆண்டுதோறும் கம்பர் விழாவினை மிகச் சிறப்பாக நடத்தி வந்தார். கம்பன்மீது கொண்ட பற்றின் காரணமாக இவர் தமது பெயரைக் கம்பன் அடிப்பொடி என்று மாற்றிக்கொண்டார்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் உறுப்பினராக இருந்து தமிழ்த் தொண்டாற்றியுள்ளார். கல்வெட்டாராய்ச்சியிலும் இவருக்கு ஈடுபாடுண்டு. மலேசியா, பாரீஸ் ஆகிய நாடுகளில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடுகளில் தமிழகத்தின் சார்பில் பங்கு கொண்டார்.

சுதந்திரக் கட்சி மறையத் தொடங்கியபின், இவர் அரசியலிலிருந்து விலகித் தமது முழு நேரத்தையும் இலக்கியப் பணிகட்கே செலவிட்டார். கழகம் நடத்திய விழாக்களைப் பாராட்டி வாழ்த்துரைகள் வழங்கியுள்ளார். மறைந்த இப் பெரியாரின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-ருசு, ருக0ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | சினி விசுவநாதன், சென்னை | 51—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | விசாகநம்பி, சென்னை | 5—00 |

---

# மதிப்புரை

**‘குறளும் பொருளும்’**

ஆசிரியர்: இறையரசன்; மணிமேகலை பதிப்பகம், சின்ன தாராபுரம், கரூர் வட்டம்-639 202. பக்கம் 36+280. விலை ரூ. 12-50.

அன்பர் இறையரசன் ஆக்கமிக்க பற்றுளர். ஆக்கமிக்க பற்று என்னதான் ஆக்காது! திண்ணைப் பள்ளியளவிலே தம் படிப்பை முடித்துக்கொண்ட அன்னார் திந்தமிழ்ப் பள்ளியிலே நாளெல்லாம் திளைத்து நல்லூற்றம் பெற்றார். திருக்குறளை முற்றாக வரப்படுத்திக்கொண்ட அவர் உரைகள் சிலவற்றையும் ஆய்ந்து ‘நல்லுரை இஃது; அல்லுரை இஃது’ எனத் தேர்ந்தார். அத் தேர்ச்சி புத்துரை காண அவரை ஏவியது; புதுநெறி யொன்றும் காட்டியது. ஈரடிக் குறளுக்கு ஈரடித் தாழிசையில் பொருள் விளக்கம் புரிய முனைந்தார் வெற்றியும் கண்டார். எளிய இனிய தூய தமிழ்நடையில் 1330; குறளுக்கும் 1330 தாழிசைகள் இயற்றி அழகிய நூல் வடிவு தந்துள்ளார்.

திருவள்ளுவம் எவரெவரையெல்லாம் எப்படியெப்படியெல்லாம் ஆட்படுத்தி ஆக்கவினை செய்விக்கிறது! அன்பர் இறைபரசனார் பணி, புதப்பணி! புகழ்ப்பணி! மொழிப்பற்றிலே ஊறிய பெருமக்கள் முத்திரை பெற்ற பணி! வாழிய அவர்தம் வளர்தமிழ்த் தொண்டு.

—புலவர் இரா. இளங்குமரன்

## பாரதி ஒரு நெருப்பு

[ஆசிரியர்: கலைமாமணி கவிஞர் கோ. புத்தனேரி இரா. சுப்பிர மணியம், தமிழ்க்குடில் 14, சென்டாஃப் முதல் தெரு, சென்னை-18. விலை ரூ. 3.00]

பாரதி ஒரு நெருப்பு, என்னும் முதற் பாட்டின் தலைப்பினை நூலுக்குப் பெயராகக் கொண்ட மொத்தம் ஒன்பது பாடல்களின் தொகுப்பே இந்நூல். நூலின் இறுதியில் பாரதியார் வாழ்க்கை நாட்குறிப்பொன்று சேர்க்கப் பெற்றுள்ளது. புத்தனேரி சுப்பிரமணிய னாரின் பாடல் திறம்பற்றி நாம் அதிகம் கூறத் தேவையில்லை. அவரது கவிதை ஆற்றல் நாடறிந்த ஒன்று. இத்தகைய கவிஞர் பாரதியாரைப் பற்றி எழுதியிருக்கும் இப் பாடல்களில் ஒரு விறுவிறுப்பும் தனிச் சுவையும் மிளிரக் காண்கிறோம். எனவே இதனைத் தமிழக மாந்தர் பெருவிருப்புடன் விரும்பிப் படிப்பர் என்பதில் ஐயமில்லை.

## சிலம்பின் முதல் ஒலி

ஆசிரியர்: டாக்டர் வெ. சு. அழகப்பன், தமிழ்த்துறை, அழகப்பா கல்லூரி, காரைக்குடி-3. கண்ணம்மா பதிப்பகம், 8, ப. அ. லெ. தெரு, காரைக்குடி-623001. விலை ரூ. 6-00.

இத் தொகுப்பு நூல் பத்துக் கட்டுரைகளைக் கொண்டது. சிலப் பதிகாரத்தின் முதற் காதையாகிய மங்கல வாழ்த்துப் பாடல் ஆராய்ச்சியை முதற் கட்டுரையாகக் கொண்ட காரணத்தால் நூலின் பெயர் 'சிலம்பின் முதல் ஒலி' ஆயிற்று. 'ஆக்திருடிகள்' என்னும் தலைப்பில் வரும் கட்டுரை சிறந்த கட்டுரையாகும். புறநானூறு, திருக் குறள், தமிழ்விடு தூது, பாரதியாரின் பாஞ்சாலி சபதம், புதினங்கள் பற்றிய ஆராய்ச்சி ஆகிய இத்தனையும் கூடி, படித்தற்குச் சுவையும் நல்குகிறது இந்நூல்.

## தென்றல் (காவியம்)

[ஆசிரியர்: அருண்மொழி, ஆர்த்தி பதிப்பகம், 5 பரோடா தெரு, விரிவு, மேற்கு மாம்பலம், சென்னை-33, விலை ரூ. 6.00]

அன்பரசன் என்னும் கீழ்ச்சாதி ஆடவனுக்கும் தென்றல் என்னும் உயர்சாதிப் பெண்ணுக்குமிடையே ஏற்பட்ட காதலையும் அது கை கூடாமல் அவலமாய் முடிவதையும் சித்திரிக்கும் காதல் காப்பியமே 'தென்றல்'. 33 தலைப்புக்களில் இனிமையும் எளிமையும் கூடிய நடை யில் அமைந்துள்ளது இக் காவியம்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

Vol. LVI (௫௬) 1981—82




The South India Saiva Siddhanta Works

 Publishing Society, Tinnevelly, Ltd.,
Madras-1 Tirunelveli-6. Madurai-1. Coimbatore-1,
Kumbakonam-1. Tiruchirappalli-2.

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

# உள்ளுறை

## படங்கள்



### கட்டுரைகளினூடே இடம்பெறும் படங்கள்

# கழகப் புதிய வெளியீடுகள்

## திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள்

தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தரனாரின் தன் வரலாறு, கழக வழி இரண்டாவது பதிப்பாக வெளிவந்துள்ளது. திரு. வி. க. அவர்களின் வாழ்வாங்கு வாழ்ந்த வரலாற்றினை, அவர்தம் நூற்றாண்டுவிழா நடைபெற்றுக்கொண்டிருக்கும் இவ்வேளையில் தமிழர் ஒவ்வொருவரும் படித்தறியவேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். இவ்வரலாற்றில் தமிழ்த்தென்றலின் இளமைப்பருவம், கல்வி, அரசியல், சமுதாய வாழ்வு, தொழிலாளர் இயக்கத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு, சமயத்துறையில் அவர் கொண்டிருந்த பொதுநோக்கு, சீர்திருத்த ஆர்வம், காந்தி அடிகளின் கொள்கையில் அவர் கொண்டிருந்த பற்று, இன்னபிற செய்திகள் மிக அருமையாக—எல்லாரும் படித்துப் பயன்பெறும்வகையில் எழுதப்பெற்றுள்ளன. இந்நூல் இக்கால இளைஞர்கட்கு—சிறப்பாகப் பொதுவாழ்வில் ஈடுபடுவோர்க்கு நல்லதொரு வழிகாட்டியாக விளங்குகிறது. தமிழர் இல்லங்கள் தோறும்—பொதுநூலகங்கள்தோறும் இருக்கவேண்டிய சிறந்த வரலாற்று நூல். ஒரே கட்டு-அழகிய பதிப்பு. விலை ரூ. 50 00

## The Dravidian Element in Indian Culture

### (English)—Dr. Gilbert Slater

இந்திய நாகரிகம் என்பது பல சமயத்தார்க்கும் உரிய ஒரு கலப்பு நாகரிகமாக இருந்தபோதிலும் அவற்றின் அடிப்படையில் ஆரிய நாகரிகமும், திராவிட நாகரிகமுமே சிறப்பாகக் காணப்படுவனவாகும். அவற்றுள் மிகத் தொன்மையானது திராவிடநாகரிகமே என்பதும், ஆரிய திராவிட நாகரிக வேறுபாடுகளும், திராவிட நாகரிகத்தின் சிறப்புகளும் இந்நூலில் மிக விளக்கமாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன "ஆரியராவது — திராவிடராவது" என்று துச்சமாகக்கருதி வரலாற்று உண்மைகளை மறைக்க முயல்வோர்க்கு இந்நூல் தக்க விளக்கமளிக்க வல்லது. இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்புகள் எங்ஙனமெல்லாம் கலந்துள்ளன என்பதை அறியவிழையும் தமிழ் அறியாப் பிறமொழியாளர் புரிந்துகொள்ளும் வகையில் ஆங்கிலத்தில் எழுதப்பெற்றுள்ள இந்த அரிய வரலாற்று நூல் நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய சிறந்த நூலாகும். அழகிய குறைந்த விலைப் பதிப்பு.

விலை ரூ. 18 00

இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு (தமிழ்ப் பதிப்பு)
—கா. அப்பாத்துரையார் விலை ரூ. 10 00

அப்பர் அச்சகம், சென்னை-1